காரிக்கூன் காளான்வகை (த.பே.அ.)
kārikkūṉ A kind of fungus;
*Polyporus ignarius*.

காரிண்டு குத்துச்செடிவகை (த.பே.அ.)
kāriṇṭu Prickly climbing cock-spur, large shrub; *Pisonia aculeata*.

உடப்பு (மு.அ.), துரட்டுமுள் (சா.அ.), துறட்டிச் செடி (த.பே.அ.), துறட்டுமுள் (த.பே.அ.), முருவிலி (மலை.), முருவிலிக்கொடி (சா.அ.), முருவிளிக்கொடி (த.பே.அ.).

காரை குத்துச்செடிவகை
''முட்காற்காரை முதுபழன் ஏய்ப்ப'' (புறநா.258.1)
kārai Common honey thorn, shrub;
*Canthium parviflorum*.

கடலத்தி (சா.அ.), கர்மை (சா.அ.), கருவாவிகம் (சா.அ.), கழிக்காரை (சா.அ.), காரஞ்செடி (சா.அ.), காரைச்செடி (சா.அ.), குடிரம் (மலை.), குடிராகிதம் (சா.அ.), குடிராகிதமரம் (சி.வை.அ.), கொருடன் (சா.அ.), சரை (சா.அ.), செங்காரை (சா.அ.), தேரவை (F.T.C.), தேரனை (F.T.C.), நல்லகாரை (த.பே.அ.), நாகபலா (சா.அ.), நைப்பூலிகச்செடி (சி.வை.அ.), நைப்பூலிகம் (சா.அ.), படர்க்காரை (சா.அ.), படர்காரைச்செடி (சி.வை.அ.), பாலகனச்செடி (சி.வை.அ.), பாலகனம் (சா.அ.), பிண்டிதம் (சா.அ.), பூங்காரம் (சா.அ.), மதமமுகம் (சங்.அக.), முள்ளுகாரை (F. T. C.). **(26)**

காரைச்செங்காரி மரவகை (த. பே. அ.)
kāraicceṅkāri Java almond, long tree;
*Canarium commune*.

காலமேஷி கொடிவகை (சா. அ.)
kālamēṣi A creeper.

காலஸ்கந்தம் மருந்துச்செடிவகை (சா. அ.)
kālaskantam A medicinal plant.

காலிங்கம்[1] வெள்ளரிவகை (சா. அ.)
kāliṅkam A kind of cucumber.

காலிங்கம்[2]
kāliṅkam
நச்சுப்பூடுவகை (சா. அ.)
A poisonous herb.

காலிங்கம்[3]
kāliṅkam
சுரைவகை (சா. அ.)
A kind of bottle-gourd.

காலிங்கராயன் சம்பா
kāliṅkarāyaṉ campā
நான்குமுதல் ஆறுமாதங்களில் விளையும் சம்பாநெல் வகை (த.பே.அ.)
A kind of *campā* paddy maturing in four to six months.

காலியாந்துவரை
kāliyāntuvarai
படர்பூடுவகை (த. பே. அ.)
A spreading herb ; *Rhynchosia minima.*

கருங்குன்றி (மு.அ.), கல்யாணதுவரை (சா.அ.), கலியாணதுவரை (சா.அ.), காட்டுக்கொள் (த.பே. அ.), காலி (சா. அ.).

காலிராசி
kālirāci
இலங்கையிலுள்ள காலி நகரில் வளரும் கமுகு (சா. அ.)
Areca-nut palm growing in Galle, a town in Ceylon.

காலேமிந்தரம்
kālēmintaram
இலங்கை மரவகை (சா. அ.)
Ceylon calaminder wood, large tree ; *Diospyros quaesita.*

காலோத்திரம்
kālōttiram
மரவகை (சா. அ.)
Lodh, small tree ; *Symplocos racemosa.*

லோத்திரா (சா. அ.)

காவட்டம் பில்லு
kāvaṭṭampillu
புல்வகை (F. T. C.)
A grass ; *Andropogon pumilus.*

காவட்டம்புல்
kāvaṭṭampul
பெரும்புல்வகை (மலை.)
Citronella grass ; *Cymbopogon coloratus.*

இத்து (மலை.), இத்துரா (மலை.), இந்துரா (மு. வை.அ.), இந்துரு (மு.வை.அ.), இரணரோகிசம் (சா. அ.), உரோகிடம் (நாநார்த்த.), உலாங்கிலி (மலை.), உலாங்கு (த. பே. அ.), உலாங்குப்புல்

(சி.வை.அ.), உலாங்குலி (சா. அ.), உலாங்குலிப் புல் (சி. வை. அ.), உலாஞ்சல் (த. மொ. அ.), கத்திரணம்(சா.அ.), காமாச்சி(சா.அ.) காமாட்சிப் புல் (சா. அ.), காமாக்ஷிபுல் (கு. பா.), காவட்டை (த.பே.அ.), கானகத்துப்புல் (சா.அ.), கானகப்புல் (சா.அ.), குலாங்கலி (சா.அ.), குலாங்குலி (மலை.), குலாமல்லி (ஜ.செ), கொடிச்சி (மலை), கொடிச்சிப் புல் (சி.வை.அ.), கோழிக்கீரணி (சா.அ.), கோழிக் கீரணிப்புல் (சி. வை. அ.), கோழிச்சேபகப்புல் (சி. வை. அ.), கோழிச்சேபகம் (சா. அ.), கோள் (சா. அ.), சித்திரபாலா (சா.அ.), சித்திராதி (சா.அ.), சிருகாலி (சா.அ.), சிறுகால் (மலை.), சிறுகாறகப் புல் (சி. வை. அ.), சுன்னாரிப்புல் (த. பே. அ.), சூருமம் (சா. அ.), சொக்கனார்புல் (த. பே. அ.), தும்முகாம் (சா. அ.), தேப்புல் (சா. அ.), தொகல் (சா. அ.), நிகுஞ்சரப்புல் (சி.வை.அ.), நிகுஞ்சரம் (சா. அ.), பைங்கூன் (சங். அக.), போதைப்புல் (சங். அக.), மலைத்தகரம்புல் (சா. அ.), மாந்தப் புல் (பதார்த்த. 375), மாந்தை (சா. அ.), யமபூசம் (சா. அ.), யமாலாதி (சா. அ.), வட்டப் புல் (மூ. அ.), வட்டம்புல் (சா. அ.), வாசனைப் புல் (பதார்த்த. 377), வாசினி (சா.அ), விண்ணல் (மலை.), விண்ணாகிப்புல் (சா. அ.). **(55)**

**காவாய்** புல்வகை (சா. அ.)
**kāvāy** A grass.

காவாடுபுல் (சா. அ.)

**காளான்** பூடுவகை (த. பே. அ.)
**kāḷāṉ** Common mushroom, herb; *Agaricus campestris*.

அதிச்சத்திரகப்பூடு (சி. வை. அ.), அதிச்சத்திரகம் (ஜ.செ). அதிச்சத்திரம் (ஜ.செ), அதிசத்திரகம் (சா. அ.). அதிசத்திரம் (சா. அ.), ஆம்பி (புறநா. 164), ஆம்பிரகம் (சி. வை. அ.), ஆம்பிரம் (சா. அ.), ஆமம் (பச். மூ.), கரகம் (சா. அ.), காக்கலா திதம் (சா.அ.), காளாம்பி (களவழி. 36), திரகலா திகம் (சா. அ.), திரகலாதிதம் (சி. வை. அ.). நாய்க்குடை (த. பே. அ.), புற்றிற்பூ (சா. அ.), பூமிகந்தகம் (சா. அ.). **(17)**

**காளான்சம்பா** காளான் மணமுள்ள சம்பா நெல்வகை (பதார்த்த. 815)
**kāḷāṉcampā** A kind of *campā* paddy with mushroom odour.

**காறற்கொட்டி** மருந்துப்பூடுவகை (மலை.)
**kāṟaṟkoṭṭi** A medicinal herb; *Theriophonum minutum*.

**காறல் (மலை.)**

காராக்
கருணை — கிழங்குப் பூடுவகை (த. பே. அ.)
kārākkaruṇai — Tuberous-rooted herb;
*Amorphophallus companulatus.*

கந்தம் (திவா.), கந்தை (மலை.), கரணை (த. பே. அ.), கருணை (பதார்த்த. 1492), கருணைப் பலா (த. பே. அ.), சமத்திலை (சா. அ.), சிற்றாமிதக்கருணை (சி. வை. அ.), சுறணம் (மலை.), சூரணம் (பிங்.), சேனை (த. பே. அ.), தைத்தியமதனச்செடி (சி. வை. அ.), தைத்திய மதனம் (சா. அ.), புளிக்கருணை (தைலவ. தைல. 135, 20 உரை), பெருங்கருணை (சா. அ.), மலையாளச்சேனைக்கிழங்கு (சா. அ.). **(15)**

காறுகருணை — கிழங்குள்ள பூடுவகை (பதார்த்த. 415)
kāṟukaruṇai — Elephant-yam, herb;
*Typhonium trilobatum.*

அரேசகண்டு (மலை.), அரேசகானச்செடி (சி.வை. அ.), அரேசகானம் (சா. அ.), அறசோகணக்கு (சங். அக.), ஆனையடிக்கிழங்கு (சா. அ.), கடும் பலம் (மலை.). கடும்பலை (சா. அ.), கரணை (த. பே. அ.), கரணைக்கிழங்கு (சா. அ.), கரிக் கருணை (சா. அ.), கரிச்சான்கிழங்கு (சா. அ.). கருங்குரா (சா. அ.). கருங்குராக்கிழங்கு (சி.வை. அ.), கருணை (த. பே. அ.), கருணைக்கிழங்கு (சா. அ.), கறுங்கரணை (த.பே.அ.), கார்கரணை (த. பே. அ.), கார்கருணை (சா. அ.), கார்ப்பவக் கிழங்கு (சி. வை. அ.), கார்ப்பவம் (சா. அ.), காரக்கருணை (த. பே. அ.), காறற்கருணை (சா. அ.). சகுணம் (சா. அ.), சகுன்மக்கிழங்கு (சி.வை. அ.), சட்டிக்கரணை (சா. அ.), சூரணக்கிழங்கு (சா. அ.), சூரனம் (சா. அ.), நற்கருணை (சா. அ.), நாட்டுக்கருணை (சா. அ.), விதாருகக்கிழங்கு (சி. வை. அ.), விதாருகம் (சா. அ.). **(31)**

கான்றை — முட்செடிவகை
''கான்றையுஞ் சூரையுங் கள்ளியு
மடர்ந்து'' (மணி. 6.81)
kāṉṟai — A thorny shrub

கானக்கைதை[1] — மரவகை (த. பே. அ.)
kāṉakkaitai — Travancore lance wood, medium tree;
*Bocagea dalzellii.*

நெடுநாட்டு (த. பே. அ.)

கானக்கைதை[2] — காட்டுத்தாழை (சா. அ.)
kāṉakkaitai — Forest screw pine.

கானகத்தின் முத்து — பூடுவகை (சா.அ.)
kāṉakattiṉ muttu — A herb.

கானமயிலை — மரவகை (சா.அ.)
kāṉamayilai — Wild ramboutan, medium tree; *Nephelium stipulaceum*.

கானாங் கோழை — பூடுவகை (த.பே.அ.)
kāṉāṅkōḻai — Calf's grass, herb; *Commelina communis*.

கி

கிச்சிலிக் கரணை — கொடிவகை (த. பே. அ.)
kiccilik karaṇai — Lopez root, medium climber; *Toddalia asiatica*.

காட்டுமிளகு (த.பே.அ.), கிண்டுமுள்ளு (F.T.C.), மிளகரணை (த.பே.அ.), மிளகரந்தி (த.பே.அ.), மிளகு (த. பே. அ.), மிளகுகரணை (மலை.), முள்ளுக்கரணை (I. M. P.), முளகரணை (த. பே. அ.).

கிச்சிலிக் கிழங்கு — நறுமணவேருள்ள பூடுவகை (தைலவ. தைல. 119 உரை)
kiccilik kiḻaṅku — Camphor zedoary, herb; *Hedychium coronarium*.

கச்சுரம் (சா.அ.), கச்சோரம் (தைலவ. தைல. 74), கச்சோலம் (தைலவ. தைல. 21), கந்தபலாசி (சா. அ.), கர்ப்பூரவேர் (சா.அ.), கிச்சிலி (த.பே.அ.), கெந்திமூலம் (சா. அ.), கைச்சோரம் (தைலவ. தைல. 77), கைச்சோலம் (சா. அ.), சங்கீதம் (சா. அ.), சந்திகந்தம் (சா. அ.), சந்திரமூலிகை (சா.அ.) சீமைக்கிச்சிலிக்கிழங்கு (த.பே.அ.). **(13)**

கிச்சிலிப்பனை — பனையின மரவகை (த. பே. அ.)
kiccilippaṉai — Malayan sugar-palm, tall stout palm; *Arenga saccharifera*.

குமுதிப்பனை (த.பே.அ.), சேகோவரிசி (சா.அ.).

கிசுமிசு — பெர்சியா நாட்டுக் கொட்டையில்லாத் திராட்சை (சா. அ.)
kicumicu — Seedless raisin from Persia.

கன்றுக்குட்டிப்புல் (த. பே. அ.), கன்றுபுக்கான் (த. பே. அ.), கன்னாங்கீரை (த. பே. அ.), கானாங்கீரை (த. பே. அ.), கானாவாழை (த.பே. அ.), கானான்வாழை (சா. அ.).

கானாவாழை — பூடுவகை (த. பே. அ.)
kāṉāvāḻai — A herb; *Commelina bengalensis*.

கஞ்சடம் (சா. அ.), கனவாழை (F. T. C.), காட்டுக்கானாங்கோழை (மு. அ.), கானாங்கோழை (த. பே. அ.).

கானான் — கொடிவகை (இராசவைத்.)
kāṉāṉ — A creeper.

இனிப்புமாதிரப்பழம் (சி. வை. அ.), ஈசத்துபீசம் (சா. அ.), கிஸ்மிஸ்பழம் (த. பே. அ.), கொட்டை மிலாமுந்திரிகை (சா. அ.).

கிசோரம் — செடிவகை (சா. அ.)
kicōram — A plant.

கிஞ்ஞா — பசுமையான சிறு இலைகளை உடைய செடிவகை (த. பே. அ.)
kiññā — A kind of shrub with small evergreen leaf.

கிடாமுன்னை — ஒருவகை முன்னை (சா. அ.)
kiṭāmuṉṉai — Serrata fire-brand teak, small tree; *Premna thyrsoidea*.

கிடாரமுக்கி — செடிவகை (சா. அ.)
kiṭāramukki — A plant.

கிண்ணை — சிறுமரவகை (சா. அ.)
kiṇṇai — A small tree; *Sonneratia caseolaris*.

கிணாங்கு — புல்வகை (த. பே. அ.)
kiṇāṅku — A grass; *Ophiuros exaltatus*.

கித்தார் — மரவகை (த. பே. அ.)
kittār — Fiddle wood, medium tree; *Citharexylum subserratum*.

கிரந்திகம் செடிவகை (சா. அ.)
kirantikam A plant.

குஞ்சகிவம் (சா. அ.), நெபத்திகை (சா. அ.).

கிரந்திதலம் கிழங்குவகை (சா. அ.)
kirantitalam A kind of bulbous root.

கிரந்திநாயகம் பூடுவகை (பதார்த்த. 290)
kiranti nāyakam An erect herb; *Dipteracanthus patulus.*

இசைமுடி (மலை.), ககபீகநாயச்செடி (சி. வை. அ.), ககபீசம் (சா. அ.), காட்டுநாயகச்செடி (சி. வை. அ.), காட்டுநாயகம் (சா. அ.), கிரந்தி (சா. அ.), கிரந்திநாயகன் (கு. பா.), கிரந்திநாயன் (கு. பா.), கிரந்திப்பூண்டு (சி.வை.அ.), சிலந்தன் செடி (சி.வை.அ.), சிலந்திநாயகம் (மூ. அ.), சூக்குலம் (சா. அ.), சூக்குழம் (சா. அ.), சூந்துமம் (மலை.), சூந்துயிலி (சா. அ.), சூந்துயிலிச்செடி (சி. வை. அ.), தூறுபுட்பம் (சா. அ.), நாயகம் (சா. அ.), நீட்டினவிரல் (சி. வை. அ.), நீட்டின விரல் குறித்தான் (மலை.), புடகிலாஞ்செடி (சி. வை. அ.), புடகிலாம் (சா. அ.), புன்கிரந்தி (சா. அ.), புன்கிரந்திச்செடி (சி. வை. அ.), வைக்கிராந்திதச்செடி (சி. வை. அ.), வைக்கிராந்திதம் (சா.அ.). **(26)**

கிரந்திபர்ணகம் நறும்ணப்பூடுவகை (சா. அ.)
kiranti parṇakam A fragrant herb.

கிரந்தினிகம் கிழங்குள்ள பூடுவகை (சா. அ.)
kirantiṉikam A bulbous rooted herb.

கிரமுகம் கோரைவகை (சா. அ.)
kiramukam A kind of sedge.

கிரமாமுகி (சா. அ.), குடோச்சம் (சா. அ.).

கிராடவல்லபம் சந்தனவகை (சா. அ.)
kirāṭa vallapam A kind of sandal wood.

கிரிதி பெருங்குத்துச்செடிவகை (சா. அ.)
kiriti A long shrub; *Maesa indica.*

தப்பச்செடி (F.T.C.), பெரிய உண்ணி (F.T.C.), வமரை (I. M. P.).

கிரிவாரிணி புல்வகை (சா.அ.)
kirivāriṇi A grass.

கிரிவாரிணிமாஞ்சில் (சி.வை.அ.)

கிருட்டிணகேழி பூடுவகை (சா.அ.)
kiruṭṭiṇakēḻi Brazilian hog weed; *Bougainvillea spectabilis.*

கிருட்டிணகேளி (த.பே.அ.), கிருஷ்ணகேழி (சா.அ.).

கிருட்டிணசாலி ஒருவகைக் கறுப்புநெல் (சா.அ.)
kiruṭṭiṇacāli A black variety of paddy.

கிருட்டிண பரணி துளசிவகை (சா.அ.)
kiruṭṭiṇa paraṇi A kind of basil; *Ocimum pilosum.*

கிருட்டிண மதூரம் ஒருவகைக் கறுப்புக்கீரை (சா.அ.)
kiruṭṭiṇa macūram A kind of black green.

கிருமிசத்துரு பூடுவகை (சா.அ.)
kirumicatturu A herb; *Erythrina fulgens.*

சித்தகலிகச்செடி (சி.வை.அ.), சித்தகலிகம் (சா.அ.), திப்பிலிநாரி (சா.அ.), திப்பிலிநாரிச்செடி (சி.வை.அ.).

கிருஷ்ண கர்ப்பம் சிறுமரவகை (சா.அ.)
kiruṣṇa karppam A small tree; *Myrica nagi.*

மருதம் (I.M.P.)

கிருஷ்ண சதுகமரம் சதுகமரவகை (சா.அ.)
kiruṣṇa catukamaram A black variety of sadugam.

கிலீடகம் நச்சுக்கிழங்குள்ள ஒருவகைப் பூடு (சா.அ.)
kilīṭakam A herb with poisonous bulbous root.

கிலுகிலுப்பை[1] குத்துச்செடிவகை (த.பே.அ.)
kilukiluppai Rattle wort, medium shrub; *Crotalaria pulchra*.

உலவை (மலை.), உலாங்கிலி (சங்.அக.), ஒடை (மலை.), காட்டுப்பேரிகை (சா.அ.), காட்டுப் பேரிகைச்செடி (சி.வை.அ.), கிலுங்கி (மலை.), சில்லை (த. பே. அ.), சொடக்கு (மலை.), தமரக வொலி (மலை.), தமரகவொலிச்செடி (சி வை.அ.), நரிமிரட்டி (பாலவா. 50), நரிமருட்டி (மலை.), நாகத்தினுயிர்பெந்தத்தி (சா. அ.), பேய்மிரட்டி (த. பே. அ.). **(14)**

கிலுகிலுப்பை[2] குத்துச்செடிவகை (த. பே. அ.)
kilukiluppai Laburnum-leaved rattle wort, medium shrub; *Crotalaria laburnifolia*.

அடவிமூர்க்கிச்செடி (சி. வை. அ.), அடவிமூர்ச்சி (சா.அ.), இலாங்கலிப்பேரிகம் (சி.வை.அ.), எலிப் பொறி (சா. அ.), கம்பலை (சா. அ.), கம்பலைச் செடி (சி. வை. அ.), கிங்கிணி (சா. அ.), கிங்கினி (சி.வை.அ.), கிணிதி (மலை.), கிலிங்கி (சா.அ.), கிலுகிலி (சா. அ.), கிலுகிலுப்பைச்செடி (சி. வை. அ.), கிலுங்காகிலு (சா. அ.), கிலுங்காகிலுச்செடி (சி. வை. அ.), கிலுங்கி (மலை.), கிலுப்பை (சா. அ.). கிளிதி (சா.அ.), கினிதி (சா.அ.), கெளுத்திப் பூண்டு (த.பே.அ.), சணபுட்பிகை (சா. அ.), சரச் சிரா (சா. அ.), சரச்சிராச்செடி (சி. வை. அ.), சிசுரம் (மலை.), சிசுரவாரி (சா. அ.), சிசுரவாரிச் செடி (சி. வை. அ.), சித்தமுகம் (மலை.), சித்துடு (மலை.), சிவல் (மலை.), சிற்றிரு (மலை.), சொக் குளிகச்செடி (சி.வை.அ.), சொக்குளிசம் (சா.அ.), சொடகு (சா.அ.), தமரொலி (சா.அ.), தமரோசை (மலை.), திண்டகம் (மலை.), திண்டசம் (சா.அ.), திண்டாசச்செடி (சி.வை.அ.), நகையரல் (மூ.அ.), நகையால் (சா. அ.), நரிமருட்டி (மலை.), நரி வெருட்டி (மலை.), பல்லினார் (சா. அ.), புட் பீரசம் (சா. அ.), பேய்மிரட்டி (த. பே. அ.), மீன் கொல்லி (த.பே.அ.), மீன்கொள்ளி (த.பே.அ.), மீனஞ்சு (த. பே. அ.), மீனார்ச்சிகச்செடி (சி.வை. அ.), மீனெரிஞ்சான் (மலை.), மோசகி (சா. அ.), விலூபன்னிவிழு (மலை.). **(51)**

கிலுத்தம் மனித உருவிலமைந்த பழமுள்ள மரம்
'' மானிடம் பழுத்தன கிலுத்தம் ''
(சீவக. 1900)
kiluttam A kind of tree whose fruit resembling the human form.

கிழக்கன் புகையிலைவகை (த. பே. அ.)
kilakkan A kind of tobacco.

கிழவன்தாடி மாமரவகை (சா. அ.)
kilavantāṭi A kind of mango.

கிளிமூக்குமா மாமரவகை (த. பே. அ.)
kiḷimūkkumā A kind of mango.

கிளிமூக்குமாங்காய் (சா. அ.)

கிளிமூக்கு வெற்றிலை கிளிமூக்கைப்போன்று வளைந்த காம்புடைய வெற்றிலை (சா. அ.)
kiḷimūkku veṟṟilai A kind of betel the pedicle of which is bent like the beak of a parrot.

கிளிமூக்கு (சா. அ.)

கிளியூறற் பட்டை ஒருவகை மருந்துப்பட்டை (பதார்த்த. 508)
kiḷiyūṟaṟ paṭṭai A medicinal bark.

கிளியூறல்(கு. பா.), சிற்றிசாப்பட்டை(சி.வை.அ.), வாலரியுரி (தைலவ.), வாவரியுரி (சங். அக.), வையாரிகப்பட்டை (சி. வை. அ.), வையாரிகம் (சா. அ.).

கிளுவை மரவகை (த. பே. அ.)
kiḷuvai Hill balsam, medium tree; *Commiphora caudata*.

ஆதகாமிகம் (சா. அ.), ஆதகாமிகமரம் (சி. வை. அ.), உருக்குதனைபற்பமாக்கி (சா. அ.), கற்பூரக்கிளுவை (சா. அ.), காட்டுக்கிளுவை (த. பே. அ.), பச்சைக்கிளுவை (த. பே. அ.), பெருங்கிளுவை (த. பே. அ.), மலங்கிளுவை (சா. அ.), மலைக்கிளுவை (த. பே. அ.), மலைமா (த. பே. அ.), வெட்கிளுவை (த. பே. அ.), வெண்கிழுவை (சா. அ.). (12)

கிளைக்கோரை கோரைவகை (த. பே. அ.)
kiḷaikkōrai A kind of sedge.

கிறட்டை மருந்துப்பூடுவகை (சா. அ.)
kiṟaṭṭai A medicinal herb.

கின்னரச்சுரை மகுடி செய்யப்பயன்படும் சுரைவகை (த. பே. அ.)
kinnaraccurai Bottle-gourd or calabash climber whose fruit is used by snake charmers as a wind instrument (*makuṭi*).

கின்னரிச்சுரை (சா. அ.), திறிதூதகச்சுரை (சி. வை. அ.), திறிதூதகம் (சா. அ.), முட்டிச்சுரை (சங். அக.), வாத்தியச்சுரை (சா. அ.).

கீரி — சிறிய இலைகளை உடைய ஒருவகை மரம் (த. பே. அ.)
kiri — Very small leaved kambale tree; *Pemphis acidula*.

கீரிப்பரண்டை — குத்துச்செடிவகை ( F. T. C. )
kirripparantai — A shrub; *Andrographis affinis*.

கொடிக்குருந்து ( F. T. C. )

கீரிப்பூண்டு — பூடுவகை (த. பே. அ.)
kirippūṇṭu — Indian snake root, herb; *Ophiorrhiza mungos*.

அரவக்கீரிடி (சா. அ.), அரவக்கீரிடிப்பூண்டு (சி. வை. அ.), இராசகீரி (சா. அ.), இராசகீரிப்பூண்டு (சி. வை. அ.), கருஞ்சடைச்சி (சா. அ.), கீரி (சா. அ.), கீரிச்செடி (கு. பா.), கீரிப்புரண்டான் (சா. அ.), கீரிப்பூடு (த. பே. அ.), கீரிபுரண்டான் (கு. பா.), குத்துக்கால் (சா. அ.), சகர் (சா. அ.), சகா (சா.அ.), சகாதி (சா.அ.), சடைச்சி (சா.அ.), சடைச்சிப்பூடு (சி. வை. அ.), சடைப்பூண்டு (சா. அ.), சயலவம் (சா. அ.), சரமாங்கம் (சா. அ.), சற்பநாயகச்செடி (சி. வை. அ.), சற்பநாயகம் (சா. அ.), சற்பராசி (சா. அ.), சற்பாட்சி (சா. அ.), சன்னகரை (சா. அ.), சித்திகா (சா. அ.), சித்திகாப்பூண்டு (சி.வை.அ.), சீதகெந்திகா (சா. அ.), சுகலி (சா. அ.), செம்பேரிகம் (சா. அ.), செம்பேரிகமூன் (சி. வை. அ.), சொற்னாகப்பூண்டு (சி. வை. அ.), சொற்னாகம் (சா.அ.), திருவிலை (சா. அ.), திருவிலைப்பூடு (சி.வை.அ.), தீர்க்கபி (சா. அ.), தீர்க்கபிப்பூடு (சி.வை.அ.), தூதாயி (சா.அ.), தூதாயிப்பூண்டு (சி.வை.அ.), நகுலப்பூடு (சா. அ.), நாகசுவந்தை (யாழ். அக.), நாகருடப்பூடு (சா. அ.), நாகருடப்பூண்டு (சி.வை.அ.), நாகவல்லி (சா. அ.), நாகுலி (மலை.), நாகுலிப்பூடு (சி. வை. அ.), நாரங்கி (சா.அ.), பத்திரை (சா. அ.), பாதாளகருடன்

(சா. அ.), பாதாளகருடி (சா. அ.), பாம்புக் கொல்லி (சா. அ.), பாம்புகொல்லி (சா.அ.), பாம்புகொல்லிப்பூண்டு (சி.வை.அ.), பீதம் (சா. அ.), பீலுகம் (சா.அ.), புசகப்பூடு (சி.வை.அ.), புசகம் (சா. அ.), பெருங்கீரிப்பூடு (சா. அ.), பெருங்கீரிப்பூண்டு (சி. வை. அ.), மாதவனிறம் (சா. அ.), வாதாசனிப்பூடு (சி. வை. அ.), வாதாசனி (சா.அ.), விபனப்பூடு (சி. வை. அ.), விபனம் (சா. அ.). **(63)**

கீழாநெல்லி[1] kiḻānelli

சிறுசெடிவகை (பதார்த்த. 300)
A small plant with slender green main branch; *Phyllanthus amarus*.

அச்சடை (தைலவ. தைல.4), அமலை (த.பே. அ.), அர்த்தபாதம் (சா. அ.), அலக்கைச்சுரம் (சா.அ.), அலகைச்சுரம் (மூ.அ.), அவக்கத்தலா (சங்.அக.), அவகதவாய் (மூ. அ.), இலஞ்சியம் (மலை.), கலினை (சா.அ.), காமாலை நிவர்த்தி (சா.அ.), கீழ்க்காய்நெல்லி (த.பே.அ.), கீழ்வாய் நெல்லி (பதார்த்த. 299) கோலாவதீதம் (சா. அ.), சங்கனாட்டீசன் (சா.அ.), சிமுட்டி (மலை.), சிமுட்டிகச்செடி (சி.வை.அ.), சிமுட்டிகம் (சா. அ.), சிவா (சா.அ.), சிவாச்சகச்செடி (சி.வை. அ.), சிவாச்சகம் (சா.அ.), தமாலகி (சா.அ.), தமாளீதி (சா.அ.), தாமலகச்செடி (சி.வை.அ.), தாமலகம் (சா.அ.), தாமலகி (மலை.), தாலி (மலை.), தாலிகக்காய்ச்செடி (சி. வை. அ.), தாலியச்செடி (சி.வை.அ.), தாலியம் (சா.அ.), திருவாம்பல் (சா.அ.), நீரூறி (த.பே.அ.), புத்திர கென்னி (சா.அ.), புத்திராதரபலா (சா.அ.), புத்திரி (த.பே.அ.), புத்திரிச்செடி (சி. வை. அ.), புத்திறி (சா. அ.), பூதாத்திரி (மலை.), பெருவிரியகா (சா. அ.), மலகிதிசம் (சா. அ.), மாலந்து (சா.அ.), மாலினியாமாதா (சா. அ.), யவக்கல் (சா. அ.), வாகுனி (மலை.), விசவல்லி (மலை.), விடவல்லி (சங். அக.), வித்வேஷம் (சா. அ.), வெகுபுத்திரி (தைலவ.). **(47)**

கீழாநெல்லி[2] சிறியமரவகை (த பே. அ.)
kīḻānelli Forest small-leaved feather foil, small tree; *Phyllanthus polyphyllus*.

அரி (சா. அ.), இலகுசியம் (சா. அ.), இலகுயம் (சா. அ.), ஈகாரிகச்செடி (சி. வை. அ.), ஈகாரிகம்

குக்கில் குத்துச்செடிவகை (த. பே. அ.)
kukkil Indian bdellium, shrub; *Commiphora mukul*.

அத்திரம் (சி. வை. அ.), இரசகந்தம் (சா. அ.), ஈங்கூகம் (சா. அ.), குக்குலு (த. பே. அ.), குங்கிலியம் (த. பே. அ.), கௌசிகதாரி (சி. வை. அ.), சூட்சம் (சா. அ.), திசாயம் (யாழ். அக.), தியாசம் (யாழ். அக.), துத்தகோமம் (சா.அ.), தேவகந்தம் (மலை.), மைச்சாடிதம் (சா. அ.), மைசாட்சி (பாலவா. 710), மைஷகுக்கிலம் (சா.அ.). (14)

குங்கிலி மரவகை (சா. அ.)
kuṅkili Bastard sal, large tree; *Shorea talura*.

குங்கிலியம் (த. பே. அ.), சாலமரம் (சா. அ.), தலூரா (சா. அ.).

குங்கிலியம்[1] பெருமரவகை (த.பே.அ.)
kuṅkiliyam Konkani resin, large tree; *Boswellia glabra*.

குங்கிலியம்[2] ஆஸ்திரேலிய மரவகை (த.பே.அ.)
kuṅkiliyam Australian dammar, large tree; *Agathis robusta*.

குங்குமச்சம்பா நெல்வகை (ஜ'வி)
kuṅkumac campā A kind of paddy.

குங்குமப்பயறு பச்சைப்பயறு இனத்தைச் சார்ந்த சிவப்புப்பயறு (சா.அ.)
kuṅkumap payaṟu Red variety of the species of green gram

(சா. அ.), கருவிளநெல்லி (சா. அ.), கூர்ப்படை தறை (சா.அ.), சமத்தாதிரி (சா.அ.), சிறுநெல்லி (F. T. C.), தமாலகி (தைலவ. தைல.), தமாலகிரி (சங். அக.), நாட்டுக்கீழாநெல்லி (சா. அ.), படலெலைவஞ்சி (சா. அ.). (13)

# கு

குங்குமம் செடிவகை (த.பே.அ.)
kuṅkumam English saffron, bulbous-rooted plant; *Crocus sativus*.

அக்கினிசேகரம் (சா.அ.), ஆவகம் (சா. அ.), ஆவம் (சா. அ.), இரத்தஞ்சபித்தன் (சா.அ.), இரத்தம் (சா. அ.), உலூகலம் (சா. அ.), உலோகிதசந்தனம் (சா.அ.), காசிமீரம் (சா.அ.), கிறுசன் (சா.அ.), குசும்பம் (சா. அ.), கேசரம் (சா.அ.), கேசரவரம் (சா.அ.), கேசரி (சா.அ.), கேசரிப்பூ (சா.அ.), சங்கோசபிசுனம் (மூ.அ.), சாதிகேசம் (சா. அ.), சாதிமரசம் (சா. அ.), சுக்கிலப்புட்டா (சா.அ.), சுக்கிலபுட்டா (ஜ-வ), சுள்ளி (அக.நி.), செந்துருக்கம் (சா.அ.), ஞாலற்பூ (சா. அ.), ஞாழல் (த.பே.அ.), ஞாழல்பூ (சா.அ.), ஞாழற்பூ (சா.அ.), துருக்கம் (சா.அ.), துருமம் (சா.அ.), நறவம் (மலை.), நறவுசாரம் (சா.அ.), பலபவிரிதி (சா.அ.), பிறியகம் (சா. அ.), புட்பிகா (சா. அ.), பூமலேக்கினம் (ஜ-வ), பூமலேகினம் (சா. அ.), மரலுகம் (சா. அ.), மரவதம் (சா. அ.), மரவம் (சூடா.), மறலி (சா.அ.), மாலம் (சா. அ.), மாவச்சிரம் (சா. அ.), மாவணங்கி (சா. அ.), வரேணியம் (மூ. அ.), வல்லபேதம் (சா. அ.), வனிதா (சா. அ.), வாதங்குரா (சா. அ.), வான்மீகம் (சா.அ.). (45)

குங்குலு நீண்டமரவகை (த. பே. அ.)
kuṅkulu Bastard sal, long tree ; *Shorea roxburghii*.

குக்குலு (சா. அ.), குங்கிலி (சா. அ.), குங்கிலியம் (த. பே. அ.), தலூரம் (த. பே. அ.).

குச்சவகந்தம் ஒருவகைத்தின்கிழங்கு (சா. அ.)
kuccavakantam An edible bulbous root.

குச்சிமூலிகம் புல்வகை (சா. அ.)
kuccimūlikam A kind of club grass ; *Scirpus kysoor*.

குச்சுபுட்பம் குத்துச்செடிவகை (சா. அ.)
kuccuputpam Doway grislea, shrub ; *Woodfordia floribunda*.

குசபுட்பம் இறப்பை உண்டாக்கும் ஒருவகை நச்சுக்கிழங்கு (சா. அ.)
kucaputpam A poisonous root.

குஞ்சப்புல் புல்வகை (சா. அ.)
kuñcappul A grass ; *Eleusine indica*.

குச்சிப்புல் (சிவரக. பசாசு. மோசந. 10), குச்சில் (புறநா. 257), குச்சுப்புல் (புறநா. 257 உரை), கெணத்துப்பூண்டு (F. T. C.).

குஞ்சரமயக்கி யானையை மயங்கச்செய்யும் தன்மையுள்ள ஒரு செடி (சா. அ.)
kuñcara mayakki A plant having the virtue of confusing elephant.

குஞ்சரமயக்கிச்செடி (சி. வை. அ.), யானைப்பக்கிச் செடி (சி. வை. அ.), யானைமயக்கி (சா. அ.).

குட்டக்கினம் தொழுநோயைத் தீர்க்கும் ஒருவகைச் செடி (சா. அ.)
kuttakkiṉam A plant which cures leprosy.

குட்டியிடுக்கி நெற்பயிருடன் வளரும் ஒருபுல் (த. பே. அ.)
kuttiyitukki A kind of grass or weed of the paddy field.

குட்டையிடுக்கி (சா. அ.)

குட்டிவிளா ஒரு வகைச் சிறுசெடி (சா. அ.)
kuttiviḷā A small plant of the *Feronia* genus.

குடப்பெட்டி நெல்வகை (த. பே. அ.)
kuṭappetti A kind of paddy.

குடபாசி குடத்தைப் போன்ற பாசி (சா. அ.)
kuṭapāci A kind of pot shaped moss.

கும்பிகை (சா. அ.)

குடமல்லிகை மல்லிகை வகை (சா. அ.)
kuṭamallikai Shining trifoliata jasmine, climber ; *Jasminum calophyllum*.

திரிமல்லிகை (சா. அ.)

குடியோட்டிப் பூண்டு
kuṭiyōṭṭip pūṇṭu

முட்பூடுவகை (பதார்த்த. 293)
Prickly poppy or Mexican poppy, prickly herb ; *Argemone mexicana.*

அவாரமுகி (சா. அ.), இரசகுருவா (சா. அ.), எலியோட்டி (மூ.அ.), எலியோட்டிப்பூண்டு (சி.வை. அ.), ஏலாகச்செடி (சி. வை. அ.), ஏலாகம் (சா. அ.), கணி (சா. அ.), கருஞ்சத்திரகச் செடி (சி. வை. அ.), கருஞ்சத்திரகம் (சா. அ.), குடிக்குச்சனி (சா. அ.), குடியோட்டி (த.பே.அ.), குருக்கம் (சா.அ.), குருக்கம்செடி (கு.பா.), குருக்கு (த.பே.அ.), குருக்குச்செடி (சி. வை. அ.), குருக் குத்தி (சா. அ.), சாதிலிங்கத்தைக்குருவாக்கி (சா. அ.), சித்தாசச்செடி (சி.வை.அ.), சித்தாசம் (சா. அ.), சிரிகாலகண்டம் (சா.அ.), செடிக்குருக்கு (சி. வை.அ.), தித்தாசா (சா.அ.), தோதரா (சா.அ.), பிரத்தியம் (சா. அ.), பிரம்மராகாசி (சா. அ.), பிரமத்தண்டு (சா. அ.), பிரமதண்டம் (மலை.), பிரமதண்டி (கு. பா.), பிரமதண்டு (த. பே. அ.), பிரமராக்கசம் (சா. அ.), புட்பி (சா. அ.), முட் காசிகம் (சா. அ.), விரிஞ்சனன் (சா. அ.), விரிஞ் சனன் செடி (சி. வை. அ.), விருமளக்காச்சி (F .T. C.), வெண்குருக்குச்செடி (சா.அ.). **(36)**

குடுப்புக்கார்
kuṭuppukkār

கார்நெல்வகை (த. பே. அ.)
A kind of rainy season paddy.

குடைச் சிணுங்கி
kuṭaicciṇuṅki

கொடிவகை (சா. அ.)
A sensitive creeper of *Mimosa* genus.

குடைமிளகாய்
kuṭaimiḷakāy

மிளகாய்வகை (த. பே. அ.)
Bell-pepper, small shrub; *Capsicum grossum.*

காப்பிரிமிளகாய் (த.பே.அ.), குடமிளகாய் (த.பே. அ.), குண்டுமிளகாய் (சா. அ.), குத்தாலிகக்காய் (சி. வை. அ.), குத்தாலிகம் (சா. அ.), திறிலேசகி (சா. அ.), திறிலேசகிச்செடி (சி. வை. அ.), தொப்பைமிளகாய் (த.பே.அ.), மெதுமிளகாய் (சா. அ.), மெதுமிளகாய்ச்செடி (சி.வை.அ.), வெண்டு மிளகாய் (சி. வை. அ.). **(11)**

குடைவேல்
kuṭaivēl

வேலமரவகை (திவா.)
Umbrella thorn babul, small tree; *Acacia planifrons.*

அரிமேதம் (சா. அ.), ஈஞ்சுடாகி (சா. அ.), ஈஞ்சுடாகிமரம் (சி. வை. அ.), உடை (திவா.),

உடைகொல் (மலை.), ஒடுளகம் (சா.அ.), ஒடுளக மரம் (சி. வை. அ.), ஒடை (F.T.C.), கவிழ்வேல் (சா.அ.), கவிழ்வேலமரம் (சி. வை. அ.), காட்டுக் கொட்டேகமரம் (சி. வை. அ.), குடை (சா. அ.), குடைக்கருவேல் (சா. அ.), குடைமகமரம் (சி.வை அ.), குடைமரம் (சா. அ.), குடைவேலாமரம் (சி. வை. அ.), குறுஞ்சாலிகமரம் (சி. வை. அ.), குறுஞ்சாலிகை (சா.அ.), சந்தனவேலன் (சா.அ.), சாலி (த. பே. அ.), சாலிமரம் (சா. அ.), சாலை (சா.அ.), சாளி (த.பே அ.), சிதடிகம் (சா.அ.), சிதடிகமரம் (சி. வை. அ.), சுக்குநாறி (சா. அ.), சுக்குநாறிமரம் (சி. வை. அ.), ததிமேரு (சா.அ.), ததிமேருமரம் (சி. வை. அ.), பாரிபாசம் (சா.அ.), பாரிபாசமரம் (சி. வை. அ.), பாலூகம் (சா. அ.), பாலூகமரம் (சி. வை. அ.), புட்கரமரம் (சி. வை. அ.). **(34)**

**குண்டக் காய்ச்சி** பானையைப் போன்ற காயுடைய தென்னை (சா. அ.)
kuṇṭakkāycci A species of coconut with round shapped fruits.

குண்டற்கச்சி (பதார்த்த. 71), குண்டற்காய்ச்சி (சா. அ.).

**குண்டல பாலை** சித்தர் நூல்களில் குறிக்கப்படும் ஒரு கற்ப மூலிகை (சா. அ.)
kuṇṭalapālai A rejuvenating plant mentioned in siddhar's medicine.

குண்டலிப்பாலை (சா. அ.)

**குண்டில்** செடிவகை (சா. அ.)
kuṇṭil A plant.

**குண்டுச் சம்பா** ஆறுமாதங்களில் விளையும் சம்பா நெல்வகை (த. பே. அ.)
kuṇṭuccampā A kind of *campā* paddy that matures in six months.

குண்டச்சம்பா (சா. அ.), குண்டைச்சம்பா (த. பே. அ.).

**குண்டு மல்லிகை** மல்லிகை வகை (த. பே. அ.)
kuṇṭumallikai Arabian or tuscan jasmine; medium shrub; *Jasminum sambac.*

அடுக்குமல்லிகை (மூ. அ.), அநங்கம் (சா. அ.), அனங்கம் (பிங்.), குடமல்லிகை (த. பே. அ.), குடைமல்லிகை (சா. அ.), குமாரகம் (சா. அ.), கொடிக்காசினி (சா. அ.), கொடிக்காசினிப்பூ (சி. வை. அ.), கொடிமல்லிகை (பிங்.), கொடிமல்லிச் செடி (F. T. C.), சதவீரு (மலை.), செண்டு மல்லிகை (த. பே. அ.), செலகம் (த. பே. அ.), செலுகம் (சா. அ.), திரிபுரமல்லிகை (யாழ். அக.), துசகதாதிகம் (சா. அ.), துசகதாதிச்செடி (சி.வை. அ.), தேவலதை (மலை.), நவமாலிகம் (சா. அ.), நாரிட்டம் (சா. அ.), நீளமல்லிகை (த. பே. அ.), நைபாலி (மலை.), நைபாலிகச்செடி (சி.வை.அ.), நைபாலிகம் (சா. அ.), நைபானி (சங். அக.), பருத்தவச்செடி (சி. வை. அ.), பருத்தவம் (சா. அ.), பருத்தவழகை (மலை.), பிரமோதனி (மூ. அ.), மதுமல்லி (சா. அ.), மல்லி (த. பே. அ.), மல்லிகாமோதிநி (ஜ-ு), மல்லிகாமோதினி (மூ. அ.), மல்லிகை (பிங்.), வ்ருத்த மல்லிகை (ஜ-ு), விருத்தமல்லிகை (சா.அ.). **(36)**

குண்டு
ரோசனை — உருண்டைவடிவமும் வாசனையும்உள்ள ஒருவகை மருந்துக்கிழங்கு (மலை.)
kuṇṭurōcaṇai — An odoriferous root growing in circular masses.

ஈங்காவிதக்கிழங்கு (சி. வை. அ.), ஈங்காவிதம் (சா. அ.), குண்டோசனை (சா. அ.), குண்டோசனைக்கிழங்கு (சி. வை. அ.).

குத்தாளை — மழையின் உதவியால் மானவாரியாக விளையும் நெல்வகை (த. பே. அ.)
kuttāḷai — A kind of paddy growing only with the help of rain.

கும்பாளை (த. பே. அ.)

குத்துக்
கரந்தை — பூடுவகை (த. பே. அ.)
kuttukkarantai — A species of flea bane, herb; *Blumea obliqua.*

குத்துக்காரன்
சம்மட்டி — மருந்துச்செடிவகை (சா. அ.)
kuttukkāraṉ cammaṭṭi — A medicinal plant; shrub; *Indigofera oblongifolia.*

குத்தாக்கு சிமிட்டி (சா. அ.), குத்துக்கால் (சா. அ.), குத்துக்காற் சம்மட்டி (சா. அ.), குத்துக்காற்

சிமிட்டி (சா. அ.), கொத்தாக்குச் சிமிட்டி (சி.வை. அ.), தீட்சகதீதம் (சா. அ.), தீட்சனக் கதீதச்செடி (சி. வை. அ.).

**குத்துக்காரை** காரைச்செடிவகை (த.பே.அ.)
**kuttukkārai** A small species of *kārai*, shrub; *Canthium angustifolium*.

**குத்துக்கோரை** கோரைவகை (த.பே.அ.)
**kuttukkōrai** Wet-land sedge; *Cyperus compressus*.

கொட்டிக்கோரை (த.பே.அ.). கொத்துக்கோரை (சா.அ.).

**குத்துச்சீந்தில்** சீந்தில்வகை (சா.அ.)
**kuttuccintil** A species of gulancha.

குத்துப்பகன்றை (சா.அ.)

**குத்துத்திராய்** கீரைச்செடிவகை (த.பே.அ.)
**kuttuttirāy** Wild Indian chick weed, edible herb *Mollugo pentaphylla*.

சீரகப்பூண்டு (F.T.C.), பற்படாகம் (W.I.).

**குத்துப் பகன்றை** செடிவகை (த.பே.அ.)
**kuttuppakaṉṟai** A species of pin weed; *Lechea verticillata*.

**குத்துப்பிடாரி** செடிவகை (சா.அ.)
**kuttuppiṭāri** A plant.

ஈளக்காலிச்செடி (சி.வை.அ.), குத்துப்பிடாரிச்செடி (சி. வை. அ.), சிறுதேளிகச்செடி (சி.வை.அ.), வயந்தியச்செடி (சி.வை.அ.), வயந்தியம் (சா. அ.), வனதேவிச்செடி (சா. அ.), வாய்கட்டிமூலி (சா.அ.).

**குத்து வல்லாரை** வல்லாரைவகை (சா.அ.)
**kuttuvallārai** A species of Indian penny wort (*Vallārai*).

ஈரவூனிகம் (சா.அ.)

**குதிரைச்செவிக் கள்ளி** குதிரைக்காதைப்போன்ற இலையுடைய ஒரு கள்ளி (சி. வை. அ.)
**kutiraiccevik kaḷḷi** A kind of spurge the leaf of which resembles the horse ear.

குசிகம் (சா. அ.), குதிரைச்செவி (சா. அ.), துடிகாதீதக்கள்ளி (சி.வை.அ.), துடிகாதீதம் (சா.அ.), தௌரிதசெவிக்கள்ளி (சி.வை.அ.), நாணாங்கள்ளி (சா. அ.), நாணுகக்கள்ளி (சா. அ.), பரிச்செவிக்கள்ளி (சா.அ.).

குதிரைப் பசலை — ஒருவகைப் பசலை (சா. அ.)
kutiraip pacalai — A kind of spinach.

குதிரைப் பிடுக்கன் — நீண்ட மரவகை (மு. அ.)
kutiraip piṭukkaṉ — Fetid tree, long tree; *Sterculia foetida.*

அதிகநாறி (சா.அ.), அரளி (மலை.), இருள் (சா. அ.), உறக்கமரி (சா. அ.), உறக்கமரிமரம் (சி. வை.அ.), ஊத்தைநாறி (மு. அ.), ஊமத்தூகநாறி (சா. அ.), ஊமத்தூகநாறிச்செடி (சி. வை. அ.), ஒட்டக்காய் (சா. அ.), ஒட்டகைப்பீசன்மரம் (சி. வை.அ.), ஒட்டகைபீசன் (சா. அ.), கசங்கம் (சா. அ.), குதிரைப்பிடுக்கு (சா.அ.), குதிரைப்புடுக்கன் (சா. அ.), கொழுங்காதிகம் (சா. அ.), கொழுங்காதிகமரம் (சி. வை. அ.), சுடீரம் (சா.அ.), சுடீரமரம் (சி. வை. அ.), தௌரிதமரம் (சி. வை. அ.), நாறி (சா.அ.), பீநாத்தி (சா.அ.), பீநாறி (த.பே. அ.), பீமரம் (சா. அ.), பூதகரப்பன் (சா. அ.), பூதகரப்பான் (த. பே. அ.), பூதகரப்பான்பட்டை (I. M. P.), பூதகரப்பான்மரம் (சி. வை. அ.), பூதவச்சம் (மலை.), பூதவம் (சா. அ.), பூதவமரம் (சி. வை. அ.), பூதவிருக்கம் (சங். அக.), பூதவிருட்சம் (மலை.), பெருமரம் (மலை.), பெருமுட்டை (த. பே. அ.), மருக்காதிநாதிமரம் (சி. வை. அ.), மலைத்தேங்காய் (த.பே.அ.), மோதகம் (சா.அ.), மோதகமரம் (யாழ். அக.), மோதமரம் (சா. அ.). (39)

குதிரைவாலி — ஒருவகைப் புன்செய்ப் பயிர் (த.பே.அ.)
kutiraivāli — Rough bristle grass or poor man's horse-tail millet; *Setaria verticillata.*

அமரிப்புல் (சி. வை. அ.), இருளோதயப்புல் (சி. வை. அ.), இருளோதயம் (சா. அ.), எலியொட்டி (சா.அ.), ஒட்டி (சா.அ.), ஒட்டிக்குவான் (சா.அ.), ஒட்டுப்புல் (த.பே.அ.), கங்குனிபத்திரம் (சா.அ.), கடுக்கன் (மு. அ.), கடுக்கன்புல் (த. பே. அ.), கணைப்புல் (த. பே. அ.), காம்போசி (மலை.), கிட்டிணவாலி (சா. அ.), கிருஷ்ணவாலிக்கொடி

(சி. வை. அ.), குதிரைவாலிச்சாமை (த.பே.அ.), சங்காரி (மலை.), சடைப்புல் (சா. அ.), துரங்கப் பேரரசி (சா. அ.), தெட்டங்காசச்செடி (சா. அ.), நடந்தாரைத்துடர்ந்தான் (சா.அ.), நெல்லுப்புல்லு (த. பே. அ.), நோம்புவாலி (சா. அ.), பரிவாலி (மூ. அ.), மிரியாகூந்தல் (த. பே. அ.), வாலி (மூ. அ.). (25)

குதிரைவாலிச் சம்பா — குதிரைவாலிச்சாமையைப் போன்ற சம்பாநெல்வகை (த. பே. அ.)
kutiraivālic campā — A kind of *campā* paddy like horse tail millet.

துரங்கப்பேரரசி (சா. அ.)

குதிரைவாலிப் புல் — புல்வகை (த. பே. அ.)
kutiraivālip pul — A kind of grass ; *Panicum brizoides*.

ஈரப்பலாதிதச்செடி (சி. வை. அ.), ஈரப்பலாதிதம் (சா. அ.), ஈரவாலி (சா. அ.), கல்லுறவாலி (சா. அ.), கல்லுறவாலிச்செடி (சி. வை. அ.), குதிரை வாலி (சா.அ.), குதிரைவாலிக்கியாழம் (சா. அ.), குதிரைவாற்புல் (சா. அ.), நோம்புவாலி (சா.அ.). நோம்புவாலிச்செடி (சி. வை. அ.), முதியகுழல் (தைலவ.தைல.76). (11)

குதிரை வாலிப்பூ — கொடிவகை (த. பே. அ.)
kutiraivālippū — Purple wreath, large climber ; *Petrea volubilis*.

குதிரைக்கொல்லி (சா. அ.), குதிரைகொல்லி (த. பே. அ.), குதிரைவாலி (த. பே. அ.).

குந்தரம் — புல்வகை (சா. அ.)
kuntaram — A grass.

குந்தாணிக் கொடி — கொடிவகை (த.பே.அ.)
kuntāṇikkoṭi — Motar - flower bind weed, small climber; *Ipomoea bracteata*.

குண்டாணிக்கொடி (த.பே.அ.), குண்டாணி (சா.அ.).

குப்புழை — கால்நடைகளுக்கு உணவாகும் இலைகளை உடைய ஒரு கொடி (த.பே.அ.)
kuppuḷai — A kind of creeper whose leaves serve as food for cattle.

குப்புழாய் (த.பே.அ.)

குப்பைக்கீரை — குட்டையான தண்டுக்கீரை (த.பே.அ.)
kuppaikkīrai — A weed of cotton soils, herb; *Amaranthus viridis*.

ஈருவாதி (சா.அ.), ஈருவாதிக்கீரை (சி.வை.அ.), குள்ளத்தண்டுக்கீரை (சா.அ.), கொல்லைக்கீரை (சா.அ.), நிச்சதக்கீரை (சா.அ.), நிச்சதம் (சா.அ.), பேய்ப்பலாதி (சா.அ.), பேய்ப்பலாதிக்கீரை (சி.வை.அ.), வாகுசக்கீரை (சி.வை.அ.), வாகுசம் (சா.அ.). (10)

குப்பைமஞ்சள் — மட்டமான ஒருவகை மஞ்சள் (சா.அ.)
kuppaimañcaḷ — An inferior variety of turmeric.

குப்பைமுள்ளி — சிவப்புக்கீரைவகை (சா.அ.)
kuppaimuḷḷi — Red thorny spinach; *Amaranthus spinosus*.

குப்பைமுள்ளிக்கீரை (சி.வை.அ.), சிவப்புமுள்ளிக்கீரை (சா.அ.), செம்முள்ளி (சா.அ.), செம்முள்ளிக்கீரை (சி.வை.அ.), முட்கீரை (த.பே.அ.), முள்ளங்கீரை (த.பே.அ.), முள்ளிக்கீரை (மூ.அ.), முள்ளிச்சிவப்பு (சா.அ.), முள்ளிச்சிவப்புக்கீரை (சி.வை.அ.), முள்ளுக்கீரை (த.பே.அ.). (10)

குப்பைமேனி — மருந்துச்செடிவகை (த.பே.அ.)
kuppaimēṉi — Indian acalypha, medicinal shrub; *Acalypha indica*.

அக்கினிச்சலம் (சா.அ.), அக்கினிச்சிவம் (சா.அ.), அக்கினிசிவம் (மூ.வை.அ.), அங்குணம் (ஜாஃ), அங்குரம் (சா.அ.), அண்டகம் (மலை.), அண்டகமேனி (சா.அ.), அண்டகமேனிச்செடி (சி.வை.அ.), அதிகமேனிச்செடி (சி.வை.அ.), அரிமஞ்சரி (மலை.), அனந்தகச்செடி (சி.வை.அ.), அனந்தகம் (சா.அ.), அனந்தம் (மூ.அ.), அனந்தை (நாநார்த்த.), ஆகம் (சா.அ.), இந்திரைமேனி (சா.அ.), இந்திரைமேனிச்செடி (சி.வை.அ.), ஈங்கரச்செடி (சி.வை.அ.), ஈங்கரம் (சா.அ.), எரிசிகை (நாமதீப.), ஒடுவடக்கி (த.பே.அ.), கடிப்பாங்கிகம் (சா.அ.), கடிப்பாங்கிச்செடி (சி.வை.அ.), கடுக்கன் (சா.அ),

கரியரியுரித்தோன் (சா. அ.), காலகாலாக்கினி யரனோன் (சா.அ.), காலாக்கினியோன் (சா.அ.), குப்பமன்னி (சா. அ.), குப்பாமணி(சா.அ.),குப்பா மணி (சி.வை.அ.), குப்பிக்கெத்தம் (சா.அ.), குமரி (சா.அ.), கொழிதமேனி (சா. அ.), கொழித மேனிச்செடி (சி.வை.அ.), கொழிப்பூ (சா.அ.), கொழிப்பூண்டு (மலை.), கொழிற்பூண்டு (சி.வை. அ.), கோளிப்பூடு (சா. அ.), சக்கரபுட்பச்செடி (சி.வை.அ.), சக்கரபுட்பம் (சா.அ.), சக்கரபுட்பி (மலை.), சக்கிரபுட்பி (சா.அ.), சக்கிரபுட்பிச்செடி (சி.வை.அ.), சக்கிறபுட்பி (மூ.வை.அ.), சானக்கி மேனி (சா.அ.), சானக்கிமேனிச்செடி (சி. வை. அ.), சிவப்புக்கந்திகா (சா.அ.), சிவப்புக்கந்திகாச் செடி (சி.வை.அ.), சீவந்திரேவதச்செடி (சி. வை அ.), சீவந்திரேவதம் (சா. அ.), சுகதுக்கம் (சா.அ.), சுகதுக்கமிரண்டறியுமிலை (சா.அ.), சுருபனாதி (சா.அ.), செகமுருகமேனி (சா.அ.), சைலமேனி (சா.அ.), சைலமேனிச்செடி (சி.வை. அ.), தனிவல்லி (சா.அ.), தனிவல்லிச்செடி (சி. வை.அ.), தனிவலிப்பெருமாள் (மலை.), திரிபுரத் தான் (சங்.அக.), திரிபுரமெரித்தான் (சா.அ.), திருமேனி (சங்.அக.), திருமேனிக்கடுக்கன் (ஜ.௰), திருமேனிகண்டன் (சா. அ.), திருமேனியழகி (மலை.), திருமேனியழகிச்செடி (சி. வை. அ.), தெருவிலழகி (மலை.), தெருவிலழகு (மூ.வை. அ.), தேகாரம் (சா.அ.), தோலுரித்தோன் (சா. அ.), நசியரி (மலை.), நசியரிமேனிச்செடி (சி. வை.அ.), பயிரவி (சா.அ.), பயிலிகம் (சா.அ.), பயிலிமேனிச்செடி (சி.வை.அ.), பயிலியம் (மலை.) பூதி (சா.அ.), பூனைப்பகை (சா.அ.), பூனைப் பகைச்செடி (சி. வை. அ.), பூனைமூலி (மூ.அ.), பூனைவணங்கி (நாமதீப. 321) பூனைவணங்கிச் செடி (சி.வை.அ.), மயிலம் (மலை.), மயிலமேனி (சா.அ.), மயிலமேனிச்செடி (சி.வை.அ.), மாங்கரி யான் (சா. அ.), மாயகன்னி (சா.அ.), மாற்சால மோகினி (சா.அ.), முறைமசக்கி (சா.அ.), முறை மயக்கி (சா. அ.), முறைமயக்கிச்செடி (சி. வை. அ.),மூவிலை (சா.அ.), மூன்றிலைமேனி(சா.அ.), மூன்றிலைமேனிச்செடி (சி. வை. அ.), மேனகை வாரி (சா. அ.), மேனி (சா. அ.), மேனியிலைச் செடி (சி. வை. அ.), வலக்கொன்னை (சா. அ.), வாலப்பருதி (சா. அ.), விசுவகப்பியம் (சா. அ.), விமலி (நாமதீப. 321), வினைவிகா (சா. அ.), வினைவிகாச்செடி (சி. வை. அ.), வேதாக்கினி குமரன் (சா. அ.). **(104)**

**குபேரகம்** *நீர்ப்பூடுவகை (சா. அ.)*
**kupērakam** Singhara-nut, an aquatic herb; *Trapa bispinosa.*

*சிங்கரா (I. M. P.), சிங்கராக்கொட்டை (சா.அ.).*

கும்பச்சுரை குடத்தைப்போன்ற காயுள்ள சுரை (சா. அ.)
kumpaccurai Round bottle-gourd.

ஆகம் (சா.அ.), இலம்பைநா (சா.அ.), இறுமாப்பு (சா. அ.), இறுமாப்புச்சுரை (சி. வை.அ.), கல்லுகாமிகக்கொடி (சி. வை. அ.), கல்லுகாமிகம் (சா. அ.), கலசச்சுரை (சா. அ.), கலசச்சுரைக்கொடி (சி.வை.அ.), கும்பதும்பி (சா. அ.), கூறம் (சா. அ.), தாடவியக்கொடி (சி. வை. அ.), தாடவியம் (சா. அ.), மெதுவுசுரை (சா. அ.), மெதுவுசுரைக்கொடி (சி. வை. அ.). **(14)**

கும்பலா மரவகை (F. T. C.)
kumpalā A tree; *Glochidion zeylanicum*.

கொக்கமணிமரம் (F. T. C.)

கும்பளிக்காய் மாலத்தீவு, நிக்கோபர் தீவுகளில் விளையும் பருத்த உருண்டையான தேங்காய் (சா. அ.)
kumpaḷikkāy A big round fruited coconut found grown in Maldives and Nicobar islands.

கும்பாதிரி பெரியமரவகை (த. பே. அ.)
kumpātiri Gum lac tree; *Schleichera oleosa*.

அரக்கு (சா. அ.), கஞ்சிவடிச்சான் (த. பே. அ.), குதிரைமசாலி (சா. அ.), கொஞ்சி (த. பே. அ.), கொளமா (த.பே.அ.), சலக்கம் (சா. அ.), சொத்திலை (த. பே. அ.), நித்தியவஞ்சி (த. பே. அ.), புலச்சி (த. பே. அ.), புளிச்சை (த. பே. அ.), பூ (த. பே. அ.), பூமரம் (த. பே. அ.), பூவத்தி (த.பே.அ.), பூவம் (த.பே.அ.), மிருகக்கொட்டை (த. பே. அ.). **(15)**

கும்பி மரவகை (த. பே. அ.)
kumpi Carey's myrtle bloom, large tree; *Careya arborea*.

அய்மா (F.T.C.), ஆய்மா (த. பே. அ.), ஆவிமா (த. பே. அ.), இலச்சைகெட்டமரம் (த. பே. அ.), இலச்சைப்பால் (ஜூ), கம்பி (த.பே.அ.), கம்பில் (த. பே. அ.), கம்பிலி (த.பே.அ.), கல்கம்பி (சா. அ.), கல்தேக்கு (சா.அ.), கற்றேக்கு (த.பே.அ.), புட்டதண்ணி (த. பே. அ.), பூதத்தான்றி (த. பே. அ.); பேய்த்தான்றி (F. T. C.). **(14)**

குமட்டிக்கீரை கீரைவகை (சா. அ.)
kumaṭṭikkīrai A kind of green; *Allmania nodiflora.*

காமாட்சிக்கீரை (த. பே. அ.), கீரைக்கும்மட்டி (சா. அ.), கும்மட்டிக்கீரை (சா. அ.), குமிட்டிக் கீரை (சி. வை. அ.), குமுட்டிக்கீரை( F. T. C. ), முட்டிக்கீரை (சா. அ.), வள்ளிக்கீரை (F. T. C.).

குமரிஞாழல் ஒருவகைப்பச்சைப்பூடு (சா. அ.)
kumariñāḻal An evergreen herb.

குமரன் மரவகை (சா. அ.)
kumāraṉ A tree; *Phoebe wightii.*

கருந்தகிரி (F.T.C.)

குமிண்டி கீரைவகை
''குமிண்டியும் பண்ணையுங் கூட முளைக்கின்ற'' (தனிப்பா.1, 142. 38)
kumiṇṭi A kind of green.

குமிட்டில் (சா.அ.)

குமிழ் நீண்ட குத்துச்செடி வகை (த.பே.அ.)
kumiḻ Small kashmere, long shrub; *Gmelina asiatica.*

அமுதச்சோகிதம் ( சி. வை. அ. ), அமுதசோகிதம் (சா.அ.), கடம்பம் (சா.அ.), கடம்பல் (பிங்.), கடுக்குமிழ் ( சா.அ. ), கந்தமித்திரம் (சா.அ.), கபநாசனி (சா.அ.), கம்பாரி (சா.அ.), கம்பாரி மரம் (சி.வை.அ.), கல்வீகம் (சா.அ.), கல்வீக மரம் (சி.வை.அ.), காட்டுக்கோதிகச்செடி (சி.வை. அ.), காட்டுக்கோதிகம் (சா.அ.), குத்துக்குமிளன் (சா.அ.), கும்பலக்கொடி (சா.அ.), கும்பலம் (சா. அ.), கும்பளக்கொடி (சா.அ.), கும்பளம் (சா. அ.), கும்பிசம் (சா.அ.), குமிழ்க்கொடி (த.பே. அ.), குமிழகம் (சா.அ.), குமிழகமரம் (சி.வை. அ.), குமிழங்கொடி (சா.அ.), குமிழன் (சா.அ.), குமிழி (சா.அ.), குமிள் (சா.அ.), குலமேகாதி (சா.அ.), கூம்பல் ( திவா. ), சாரதி (சா.அ.), சாரதிக்குமிழ் (சி.வை.அ.), சில்லாந்தகி (சா.அ.), சில்லாந்தகிச்செடி ( சி. வை. அ. ), சிறுகுமளான் (F.T.C.), சிறுகுமிழ் (சி.வை.அ.), சிறுபூகிகச்செடி (சி.வை.அ.), சீதவமரம் (சி.வை.அ.), சீபன்னம் (சா.அ.), செங்குமிழ் (சூடா.), செடிக்குமிழ் (சா. அ.), செவகி (சா.அ.), தருமூலி (சா.அ.), நிலக் குமளா (F.T.C.), நிலக்குமிழ் ( பதார்த்த. 274 ), நீலக்குமிழ் (சா.அ.), பறுணி (சா.அ.), பறுணிச் செடி (சி.வை.அ.), மராடிகக்குமிழ் (சி.வை.அ.), மராடிகம் (சா.அ.), முள்குமிழ் (F.T.C.), மூக்கி லழுகி (மலை.), மோட்டில் (சா.அ.). (51)

குமுதிசை	நறுமணமரவகை (சா.அ.)
kumuticai	A kind of fragrant tree.

குமுதை	மரவகை (சா.அ.)
kumutai	A tree.

கரமேதம் (சா.அ.), மதுபரணி (சா. அ.).

குரசட்டி	புல்வகை (F.T.C.)
kura iṭṭi	A grass; *Sehima nervosum*.

தேந்தரப்புல் (W.I.)

குரங்ககம்	அவரைவகை (சா.அ.)
kuraṅkakam	A kind of country bean.

குரங்கு மஞ்சணாறி	சிறுமரவகை (த.பே.அ.)
kuraṅku mañcaṇāṟi	Monkey face, small tree; *Mallotus philippinensis*.

கபிலப்பொடி (த. பே. அ.), கபிலப்பொடிமரம் (சா.அ.), கபிலம் (த.பே.அ.), கபிலா (கு.பா.), கம்பில்லம் (கு.பா.), கம்போசம் (சா.அ.), கமலா (கு.பா.), கமலாப்பொடி (த.பே.அ.), கமேலா மாவுமரம் (சா. அ.), காம்போசம் (சா. அ.), காமலை (த. பே. அ.), குங்குமம் (I.M.P.), குங்குமமரம் (சா அ.), குண்டாஞ்சாலமரம் (F.T.C.), குண்ணஞ்சோலை (F.T.C.), கும்பிகம் (சா.அ.), குரங்குமூஞ்சி (த.பே.அ.), குரங்குமூஞ்சி மரம் (சா.அ.), கேசவம் (சா. அ.), கொரங்கு மஞ்சனத்தி (F.T.C.), சிந்தூரமரம் (சா. அ.), சுவர்ணகேசரி (சா.அ.), சுவன்னகேசரி (சா.அ.), தணிட்டை (சா.அ.), தவட்டை (சா.அ.), திரிசலக் காய்மரம் (F.T.C.), திருச்சலை (சா.அ.), நரவம் (ஜ-ு), நறவம் (சா.அ.), நறவமரம் (சி.வை. அ.), நறவு (மு.வை.அ.), நாகமூசிகை (சா.அ.), நாகரத்தம் (சா.அ.), புன்னாகம் (த.பே.அ.), மஞ்சணாத்தி (I.M.P.), மஞ்சனை (த.பே.அ.), மரவம் (சா.அ.). **(37)**

குரங்குமஞ்சள்	குடகுநாட்டு மஞ்சள் (சா.அ.)
kuraṅkumañcaḷ	West coast turmeric.

குரங்குமூஞ்சிக் காய்	முகப்பில் சிவப்பாயுள்ள மாங்காய் (த. பே. அ.)
kuraṅkumūñcik kāy	Red-cheeked mango.

குரண்டகம் மஞ்சள் வாடாமல்லிகை (சா. அ.)
kuranṭakam Yellow variety of bachelor's buttons (vāṭāmallikai).

குரபம் குத்துச்செடிவகை (சா. அ.)
kurapam A shrub of the *Barleria* genus.

குரா சிறுமரவகை
"குரா நற் செழும்போது"
(திவ். இயற். 2, 31)
kurā Common bottle flower, small tree; *Tarenna asiatica*.

காரைக்கீரை (சா. அ.), குரவம் (சூளா. தூது. 2), குரவு (புறநா. 335), குராமரம் (சா. அ.), கொம்மி (சா. அ.), கொம்மை (சா. அ.), கோட்டம் (த. பே. அ.), கோடிலம் (சா. அ.), கோபிதாரம் (சா. அ.), கோவிதாரம் (சா.அ.), திருணா (த.பே.அ.), திருணாப்பழம் (சா. அ.), துருமோத்பலம் (சா. அ.), தேரணி (F.T.C.), பாப்பட்டான் (சா.அ.), பாப்பட்டை (சா. அ.), பாபட்டான் (த. பே. அ.), பாலைநல்மரம் (சா. அ.), வெள்வெட்சி (த. பே. அ.). (19)

குராசாணிப்பூடு பூடுவகை (சா.அ.)
kurācāṉippūṭu A herb; *Heliotropium zeylanicum*

குராசாணி யோமம் பூடுவகை (த. பே. அ.)
kurācāṉi yōmam Black henbane, herb; *Hyoscyamus niger*.

அசமநாகி (சா. அ.), ஓமத்துவயம் (சா. அ.), கருங்குரோசிகம் (சா. அ.), கார்சவை (கு. பா.), காரபி (கு. பா.), காரஸவை (கு. பா.), காருகத்தோமம் (சி. வை. அ.), காருகம் (சா. அ.), கிருமிநாசணியோமம் (சி. வை. அ.), கிருமிநாசம் (சா. அ.), கிருமியோமம் (சா. அ.), குராசாணி (த. பே. அ.), குராசானிப்பூடு (சா. அ.), குரோசகம் (சா. அ.), குரோசாணியோமம் (த. பே. அ.), குரோசானி (சா. அ.), குரோசிகவோமம் (சா. அ.), குறாசாணி (சா. அ.), கொராசானி (சா. அ.), கொராசானி ஓமம் (மூ. வை. அ.), சாணியத்திரயம் (சா. அ.), சாணியத்திரையம் (சி. வை. அ.), திப்பியம் (கு.பா.), நௌபத்தோமம் (சி.வை.அ.), பாரசீகவோமம் (சா. அ.), மயூரம் (ஜ௵). (26)

குரிகிற்றாளி ஒருவகைத்தாளிக்கிழங்கு (சா.அ.)
kurikiṟṟāḷi A root of *Convolvulus* genus.

குரிவியாலன் ஆலமரவகை (த.பே.அ.)
kuriviyālan A common avenue-fig with stout air roots, medium tree.

குருக்கத்தி கொடிவகை
''குடந்தைக் கிடந்த கோவே
குருக்கத்திப்பூச் சூட்டவாராய்''
(திவ். பெரியாழ். 2,7.7.)
kurukkatti Common delight of the woods, medium climber; *Hiptage benghalensis*.

அதிகத்தி (சா.அ.), அதிகத்திக்கொடி (சி.வை. அ.), அதிகம் (மலை.), அதிகமாலி (சா.அ.), அதிகமாலிக்கொடி (சி.வை.அ.), அதிகாந்தி (சா. அ.), அதிமுத்தகம் (நாநார்த்த.), அதிமுத்தம் (மலை.), அயந்தனை சிந்தூரமாக்கி (சா.அ.), எருக்கத்தி (சா. அ.), எருக்கத்திக்கொடி (சி.வை. அ.), கத்திகை (சீவக. 971), கரிபாக்குக்கொடி (F.T.C.) கருங்கொடி (சா.அ.), கருடக்கொடி (மலை.), காமகாந்தம் (சா.அ.), காமுகம் (சா. அ.), குரிந்தை (மலை.), குருகு (கு.பா.), குருந்து (பிங்.), குருத்தை (சா.அ.), குறிகு (சா.அ.), குறிஞ்சா (த.பே.அ.), கோதைமாதவி (சா.அ.), சரலூகரக்கொடி (சி.வை.அ.), சரலூகரம் (சா.அ.), சோகநீக்கி (சா.அ.), நாகரி (பிங்.), நாகரு (மூ. அ.), பன்றிமொத்தை (மலை.), புண்டரம் (இலக். அக.), புண்டரவம் (ஜ9), மணங்கு (சா.அ.), மாதவி (சிலப்.14.113), மாதவிக்கொடி (சி.வை. அ.), முத்தகம் (மலை.), வசந்தகாலமல்லிகை (சி.வை.அ.), வல்லாகினி (சா.அ.), வல்லாகினிக் கொடி (சி. வை. அ.), வாசந்தி (பிங்.), விறும தண்டம் (யாழ்.அக.). **(41)**

குருங்கு குத்துச்செடிவகை (F. T. C.)
kuruṅku A shrub; *Eranthemum capense*.

குருந்து சிறுமரவகை (த. பே. அ.)
kuruntu A species of wild lime, small tree; *Pamburus missionis*.

அமரியம் (சா. அ.), கடநாத்தி (F. T. C.), காட்டு நாரஞ்சி (சா. அ.), குந்தம் (சா. அ.).

குருந்து முள்தழை சிறுமரவகை (F. T. C.)
kuruntu muḷtaḻai A small tree; *Pleiospermium alatum*.

குருவிக்கார் கார்நெல்வகை (த. பே. அ.)
kuruvikkār A small kind of paddy.

குருவிச்சை — மரவகை (த. பே. அ.)
kuruviccai — Ovate-leaved ivory wood, medium tree ; *Ehretia laevis*.

குருவிச்சி (த. பே. அ.), குருவிரசு (சா. அ.), சாயவியாதித்தழை (F. T. C.), பட்டைவிச்சு (சா.அ.), பட்டைவிரசு (த.பே.அ.), பாக்குப்பட்டை (F.T.C.).

குருவித்தலைப் பாக்கு — பாக்குவகை (த. பே. அ.)
kuruvittalaip pākku — A kind of areca-nut.

குருவிப்பாக்கு (த. பே. அ.)

குருவித் தேங்காய்[1] — சிறுதேங்காய் (த. பே. அ.)
kuruvittēṅkāy — Small coconut.

குறுதேங்காய் (சா.அ.), கோந்தளங்காய் (சா.அ.), கோந்தளாங்காய் (சி. வை. அ.).

குருவித் தேங்காய்[2] — நெல்லி இன மரவகை (சா. அ.)
kuruvittēṅkāy — A tree of the *Phyllanthus* genus.

குருவிவாலான் — பெரிய நெல்வகை (த. பே. அ.)
kuruvivālāṉ — A large variety of paddy.

குருவிளாங் கொடி — கொடிவகை (F. T. C.)
kuruviḷāṅkoṭi — A climber ; *Jasminum sessiliflorum*.

குருவை — மட்டரகநெல்வகை (சா. அ.)
kuruvai — An inferior kind of paddy.

குருவைநெல் (சா.அ.)

குரோத வல்லபம் — கோரைவகை (சா. அ.)
kurōta vallapam — A kind of sedge.

குல்மாஷம் — அவரைவகை (சா. அ.)
kulmāṣam — A kind of bean.

குல்லி — பூடுவகை (சா. அ.)
kulli — A herb.

குலதீவி
திராட்சை உயர்ந்தஇனத் திராட்சை (சா. அ.)
kulatīvi
tirāṭcai Superior kind of grape.

குலவாழை[1] சிறுமரவகை (த. பே. அ.)
kulavāḻai A species of gamboge, small tree; *Garcinia wightii*.

குளவாழை (சா. அ.), புளிமரங்கா (த. பே. அ.), புளிமாங்காய் (சா. அ.).

குலவாழை[2] ஒருவகைச் சிறந்தவாழை (சா. அ.)
kulavāḻai A superior kind of plantain.

குலவாழை[3] ஏழு முதல் எட்டு மாதங்களில் விளையும் சம்பாநெல்வகை (த. பே. அ.)
kulavāḻai A sub-species of *campā* paddy which matures in seven to eight months.

குலாகலம் நாய்கள் சிறுநீர் பெய்யுமுன் முகரும் ஒருவகைப்பூடு (சா. அ.)
kulākalam A herb which dogs are fond of smelling before they expel urine.

குலைக்கால் மரவகை (சா. அ.)
kulaikkāl A tree.

குவசிமரம் ஐரோப்பியநாட்டு மரவகை (சா. அ.)
kuvacimaram Jamaica quassia, an European tree; *Picrasma excelsa*.

சீமையாதிதம் (சா.அ.)

குவாகம் பிசின்மரவகை (த. பே. அ.)
kuvākam Lignum-vitae, medium tree; *Guaiacum officinale*.

குவாக்குச்செடி (சி.வை.அ.)

குழலா
தொண்டை சிறுமரவகை (த. பே. அ.)
kuḻalātoṇṭai Common caper, small tree; *Capparis decidua*.

காரீரம் (சா. அ.), குரரம் (சா. அ.), கெந்திகம் (மலை.), சத்திரசோபுட்பம் (சா.அ.), சாத்திபுட்பம் (சா. அ.), சிரக்கொழி (த. பே. அ.), சிரக்கோழி

(மலை.), சிரகாகோளி (சா. அ.), சிரகாதண்டை (சா. அ.), சிரகோளி (சா. அ.), சிரசுக்கிலம் (சா. அ.), சிராட்சி (சா. அ.), சிலைகரவி (சா. அ.), சிலைகரவிச்செடி (சி. வை. அ.), சூதாக்கினி (சா. அ.), செங்கம் (த. பே. அ.), பலச்சகா (சா. அ.), மருபூருகம் (த. பே. அ.), வயச்சம் (சா. அ.), வயச்சா (சா. அ.), வேணு (சா. அ.). (21)

**குழிநாவல்** குத்துச்செடிவகை (பிங்.)
**kuḻināval** Common myrtle, medium shrub; *Myrtus communis.*

சாதீவம் (சா. அ.), சாதேவம் (பிங்.), தேவம் (த. பே. அ.), தேவமரமரம் (சா. அ.), தேவர்கோன் (சா. அ.).

**குளங்கி** குத்துச்செடிவகை (F. T. C.)
**kuḷaṅki** A shrub; *Elaeagnus kologa.*

குளரி (I. M. P.), பெருங்குளிரி (F. T. C.).

**குளங்கோவை** குளத்து நீரில் விளையும் நெல்வகை (த. பே. அ.)
**kuḷaṅkōvai** A paddy grown by irrigation with tank water.

**குளத்துப்பாசி** குளத்துநீரில் படரும் பாசிவகை (சா.அ.)
**kuḷattuppāci** Moss or weed in tank water.

குலப்பச்சை (சா. அ.), சிகாவலம் (சா. அ.).

**குளநெல்** குளத்தின் நீர்ப்பிடியில் தானாகவே வளரும் ஒருவகை நெல் ''மெல்விரன் மெலியக் கொய்த குளநெல்'' (சீவக. 355)
**kuḷanel** Wild-rice growing spontaneously in the bed of tank.

குளச்செந்நெல் (த.பே.அ.), குளநெல்லி (சா.அ.), குளப்பற்றுநெல் (த.பே.அ.), கேழல் (சா.அ.), நிவாரம் (சா.அ.), நிவாரி (சா.அ.), நீர்வாரம் (பிங்.), நீலாரம் (சா. அ.), நீவார் (சா.அ.), நீவாரம் (த.பே.அ.), நீவாரி (த.பே.அ.). (11)

**குளப்படிக் கோரை** குளக்கரையில் வளரும் கோரைவகை (த.பே.அ.)
**kuḷappaṭik kōrai** A sedge growing on the banks of a tank; *Cyperus haspan.*

குளத்துக்கோரை (சா.அ.)

குளப்பயறு பயறுவகை (த.பே.அ.)
kuḷappayaṟu A kind of pulse.

குளவடம்பு குளத்தில் வளரும் ஒரு கொடி (த.பே.அ.)
kuḷavaṭampu A creeper growing in tank.

குளவரகு வரகுவகை (த.பே.அ.)
kuḷavaraku A kind of millet.

குளவாழை ஆனி, ஆவணி மாதங்களில் விதைக்கப் பெற்று ஆறுமாதங்களில் விளையும் குளநெல்வகை (த.பே.அ.)
kuḷavāḻai A coarse tank-paddy sown in āṉi—āvaṇi, maturing in six months.

குளவெள்ளரி ஏரியின் உட்புறத்துவாயில் உண்டாகும் வெள்ளரி (த. பே. அ.)
kuḷaveḷḷari Cucumber raised in tank beds.

குளிர்நாவல் உயர்ந்த நாவல்வகை (சா. அ.)
kuḷirnāval A kind of superior jaumoon tree.

குளில்செடி குத்துச்செடிவகை (F. T. C.)
kuḷilceṭi A shrub ; *Elaeagnus indica.*

குளைக்கன்னி பாசிவகை (சா. அ.)
kuḷaikkaṉṉi A kind of moss.

குறட்டை கொடிவகை (த. பே. அ.)
kuṟaṭṭai Bitter snake-gourd, large climber; *Trichosanthes tricuspidata.*

அசோண்டி (மலை.), அசோணம் (த. பே. அ.), ஆண்கொறட்டை (I. M. P.), ஆத்துமரட்சை (சா. அ.), காக்கலை (சா. அ.), காக்கலைக்கொடி (சி. வை. அ.), காறற்குறட்டை (சா.அ.), கொரட்டைக் கொடி (சி. வை. அ.), கொறட்டை (மூ.வை.அ.), சல்லியம் (சா. அ.), சவரி (மலை.), சவரிப்பழம் (I. M. P.), சவரிலோத்திரம் (த. பே. அ.), சவுரி (சா. அ.), சவுரிக்கொடி (சா. அ.), சவுரிக்கொத்து (சா.அ.), சின்னவி (சா. அ.), சின்னவிச்செடி (சி. வை. அ.), தருணசேபிகக்கொடி (சி. வை. அ.), தருணசேபிகம் (சா. அ.), நாராயணன்பூடு (சா. அ.), நெடியா (சா.அ.), நெடியாக்கொடி (சி.வை. அ.), பனங்கோரை (சா. அ.), பீனசக்குறட்டை (கு. பா.), மகாகாலம் (சா. அ.), மிரியார்கூந்தல்

(சா. அ.), முதியார்கூந்தல் (சா. அ.), மேதகசக் கொடி (சி. வை. அ.), மேதகம் (சா. அ.). விகசதி (சா. அ.), விகசதிக்கொடி (சி. வை. அ.). **(32)**

குறட்டைக் கிழங்கு — குறட்டைக்கொடியின்கிழங்கு (சா. அ.)
kuṟaṭṭaik kiḻaṅku — Bulbous root of bitter snake-gourd climber.

சவரிக்கிழங்கு (சா. அ.), சவரிவீரி (சா. அ.).

குறத்திப்பாசி — பளபளப்பான வெண்மையான உருண்டைவடிவக் காய்களை உடைய புல்வகை (த. பே. அ.)
kuṟattippāci — Job's tears, a small coarse grass having large round, white shining fruits; *Coix lachryma-jobi*.

காட்டுக்குண்டுமணி (F.T.C.), கோகிலாட்சம் (சா. அ.), நெற்பவளம் (W.I.), நெற்புல் (த.பே.அ.), பூனாச்சிப்புல் (சா. அ.).

குறவன் தோடுபுல் — புல்வகை ( F. T. C. )
kuṟavaṉ tōṭupul — A grass; *Oropetium thomaeum*.

குறிஞ்சி — குத்துச்செடிவகை (த. பே. அ.)
kuṟiñci — Square-branched cone-head, medium shrub; *Strobilanthes kunthiana*.

குறுங்கை (த. பே. அ.)

குறிஞ்சித் தினை — மலைப்பகுதிகளில் பயிராகும் தினை (சா. அ.)
kuṟiñcittiṉai — Millet growing in hilly tracts.

குறுஞ்சம்பா — சம்பா நெல்வகை ''குறுஞ்சம்பா பித்தங் குடியிருக்கச் செய்யும்'' (பதார்த்த.812)
kuṟuñcampā — A sub-species of *campā* paddy.

குறுவை[1] — வைகாசியில் விதைத்து இரண்டு மாதங்களில் அறுவடையாகும் கறுப்பு நெல் வகை (த. பே. அ.)
kuṟuvai — A dark species of paddy sown in *Vaikāci* and reaped in two months.

குறுவை[2] மூன்று மாதங்களில் பயிராகும் மட்டரகச் செந்நெல்வகை (த. பே. அ.)
kuṟuvai An inferior reddish paddy maturing in three months.

குன்மக்குடோரி ஒருவகை நீர்ப்பூடு (பதார்த்த. 244)
kuṉmakkuṭōri An aquatic herb capable of curing chronic dyspepsia.

குன்றம் புல்வகை (சா. அ.)
kuṉṟam Coix millet, grass;
*Polytoca barbata.*

கோசிகை (சா. அ.)

குன்றி கொடிவகை (த. பே. அ.)
kuṉṟi Indian liquorice, climbing shrub;
*Abrus precatorius.*

அதிங்கம் (த.பே.அ.), அதிமதுரம் (மலை.), அரு (மூ. வை. அ.), ஆவு (மூ.அ.), ஆழி (பச்.மூ.), உச்சடம் (சா.அ.), உமா (மூ.அ.), உமாகுன்றி (ஜ"ூ), உமாதகியக்கொடி (சி.வை.அ.), உமா தகியம் (சா.அ.), உயர் (மலை.), உயர்வுக்கொடி (சா.அ.), எகுன்று (மூ.அ.), ஏடலகம் (த.பே. அ.), கடுகாலி (சா.அ.), கடுகாலிக்கொடி (சி. வை. அ.), கடுகு (மலை.), கருத்தநிறமலச்சி (சா.அ.), கல்முராகி (சா.அ.), கல்முராகிக்கொடி (சி.வை.அ.), கல்லுராய்ஞ்சி (சா.அ.), காகசிஞ்சி (சா.அ.), காகசிஞ்சை (சா. அ.), காகணந்தி (சா.அ.), காகணந்திரை (சா.அ.), காகதிக்தம் (சா. அ.), காகபீலி (சங். அக.), காகவல்லாரி (சா.அ.), காம்பேரு (சா. அ.), காம்போகி (சா. அ.), காம்போகிகம் (சா.அ.), காம்போசம் (சா. அ.), காமபோகி (சா. அ.), குச்சம் (சா.அ.), குஞ்சகம் (சா.அ.), குஞ்சம் (திவா.), குஞ்சரம் (சா.அ.), குஞ்சலக்கொடி (சி.வை.அ.), குஞ்சலம் (சா.அ.), குஞ்சா (சா.அ.), குஞ்சி (சா.அ.), குஞ்சிகம் (சா.அ.), குஞ்சுரம் (த.பே.அ.), குண்டு மணி (த.பே.அ.), குண்ணி (சா.அ.), குணக் காரி (சா.அ.), குருவி (மலை.), குருவிகக்கொடி (சி. வை. அ.), குருவிகம் (சா.அ.), குருவிந்தக் கொடி (சி.வை.அ.), குறுநறுங்கண்ணி (குறிஞ்சிப். 72), குன்றிமணி (த.பே.அ.), குன்னி (சா.அ.), குனாசம் (மலை), குனாபாசக்கொடி (சி.வை. அ.), கொச்சிமஞ்சாடி (சா.அ.), கொச்சிமஞ்சாடி மணி (சி.வை.அ.), கொடிச்சி (சா.அ.), கொடி பேனம் (சா. அ.), கொடியேணச்செடி (சி. வை. அ.), கொள்ளிகம் (சா. அ.), சிங்கிலி (சா.அ.), சிடக்கண்ணி (சா. அ.), சிடிகம் (சா. அ.), சிடிக

மணிக்கொடி (சி.வை.அ.), சித்திலைச்செடி (சா. அ.), சிரிடம் (சா.அ.), சிரீடகம் (சா.அ.), சிரீடம் (சா.அ.), சிவப்பகாதிதக்கொடி (சி. வை. அ.), சிவப்பகாதிதம் (சா.அ.), சிற்றிலை (த.பே.அ.), சிற்றிலைமணிக்கொடி (சி.வை.அ.), சின்னி (சா. அ.), சின்னிசன்னி (சா.அ.), சூடாமணிக்கொடி (சி. வை. அ.), தாமிரகம் (சா.அ.), தாமிரிகை (மூ.அ.), நித்தபருவன் (சா.அ.), நகசிரிதம் (மூ. அ.), நகசிறிதம் (சா. அ.), நஞ்சறுத்தான்பூடு (சா. அ.), நஞ்சறுப்பான் (மூ. வை. அ.), நஞ்சி (மலை.), நஞ்சிச்சி (சா.அ.), நாய்க்கரந்தை (மலை.), நாய்க்காத்தான் (சா.அ.), நாய்காத்தான்

கூடுபர்இலை பிசின்மரவகை (சா. அ.)
kūṭupar ilai West Indian copal, tree ; *Hymenaea courbaril.*

கூத்தன் குதம்பை நீண்ட குத்துச்செடிவகை (சா.அ.)
kūttaṉ kutampai Indian lantana, large shrub ; *Lantana indica.*

அரிப்பூ (சா.அ.), உண்ணி (சா. அ.), உன்னி (த. பே. அ.), காட்டுச்சோளம் (சா. அ.), குதம்பை (சா. அ.), குதும்பை (சா. அ.), கொங்கிணிமுள்ளு (சா. அ.), சடிலாகியப்பூண்டு (சி.வை.அ.), சடிலாகியம் (சா. அ.), சாலகியச்செடி (சி. வை. அ.), சாலகியம்(சா.அ.), சித்ததேசியம்(சா.அ.), நதீவரி (சா. அ.), நதீவரிச்செடி (சி.வை.அ.), மாக்கடம்பு (சா. அ.), மாகடம்பு (த. பே. அ.), மூக்குத்திப்பூச் செடி (சா. அ.). (17)

கூந்தல்முள்ளி நீண்ட முட்களை உடைய ஒருவகை முள்ளி (சா. அ.)
kūntalmuḷḷi A thistle with long thorns.

கூந்தல்வேல் வேலமரவகை (த. பே. அ.)
kūntalvēl Elephant thorn, small tree ; *Acacia tomentosa.*

சாலி (த. பே. அ.)

கூந்தலறுகு அறுகுவகை (த. பே. அ.)
kūntalaṟuku A kind of hairy grass ; *Agrostis bifaria.*

கொடி (சி.வை.அ.), நிலக்குண்டி (சா. அ.), நிலக்குண்டிக்கொடி (சி.வை.அ.), நிறத்தகண்காரி (சா. அ.), பலச்சகி (சா. அ.), பலச்சகிக்கொடி (சி.வை. அ.), பலச்சரீடம் (மலை.), பாசளை (சா. அ.), மணிச்சிகை (த. பே. அ.), மதுரகம் (சா. அ.), மலைக்குருவி (சா. அ.), மூக்கிற்கரியார் (சா. அ.). **(99)**

குன்றிமேனி நிழல்பட்டால் தலைகவிழும் ஒரு பூடு (சா. அ.)
kuṉṟimēṉi A plant having a peculiar virtue of drooping when shade falls on it.

கூ

கூந்தற்கமுகு கமுகு வகை (பிங்.)
kūntaṟkamuku A kind of areca-nut palm.

கூந்தல் (சா. அ.), கூந்தல்மரம் (சி. வை. அ.), கூந்தற்பூகம் (சூடா.), தாரை (ஜ௦), தாலம் (பிங்.).

கூந்தற்பனை பனையின மரவகை (த. பே. அ.)
kūntaṟpaṉai East Indian wine palm, medium tree; *Caryota urens.*

ஆதகு (சா.அ.), ஆதகுமரம் (சி. வை. அ.), ஆதம் (மூ.அ.), ஈரம்பனை (த. பே. அ.), உடலற்பனை (சா.அ.), உடலிம்பனை (சா.அ.), உடுபாதிதமரம் (சி. வை. அ.), உதளிப்பனை (த.பே.அ.), கமுகு (சா. அ.), கரும்பனைக்கன்னி (சா. அ.), கவரியம் (சா.அ.), கவரியமரம் (சி. வை. அ.), கித்தில் (த. பே. அ.), கித்துகில் (சா. அ.), கித்துள் (மலை.), கூந்தல்பனை (F.T.C.), கூரணப்பனைமரம் (சி. வை.அ.), கூரணம் (சா. அ.), கொண்டைப்பனை (கு.பா.), சடாபலம் (சா. அ.), சடாபலமரம் (சி. வை. அ.), சலோபம் (சா.அ.), சீதாளம் (மூ.அ.), தாலம் (சா.அ.), தாளம் (த.பே.அ.), தாளிப்பனை (கு. பா.), திப்பிலிப்பனை (த. பே. அ.), பூகம் (மலை.), பூகமரம் (சி. வை. அ.), மலைப்பனை (கு. பா.), வராங்கனை (சா. அ.), வார்ப்பனை (சா. அ.). **(32)**

கூந்தற்பாசி[1] பாசிவகை (யாழ். அக.)
kūntaṟpāci Trailing moss; *Zannichellia indica.*

கூந்தற்பாசி[2] நீர்ப்பூடுவகை (சா. அ.)
kūntaṟpāci An aquatic herb; *Chara setigera.*

கூர்க்கறுப்பான் kūrkkaṟuppāṉ — உயர்ந்த நெல்வகை (த. பே. அ.) A kind of bearded paddy of superior quality.

கூரவால்செடி kūravālceṭi — பூடுவகை (F.T.C.) A herb; *Blepharis maderaspatensis*.

கோழிமூக்கள் (F.T.C.)

கூரன் kūraṉ — நெல்வகை (த.பே.அ.) A bearded kind of paddy.

கூரான் kūrāṉ — பூடுவகை (சா.அ.) A herb.

கூரெள் kūreḷ — எள்வகை (த.பே.அ.) A kind of sesame.

கூவமா kūvamā — மரவகை (த.பே.அ.) A kind of tree.

கிரந்திமாகிதம் (சா.அ.), கிரந்திமாகிதமரம் (சி.வை.அ.), கூவமாவுச்செடி (சி.வை.அ.), சர்க்கயா (சா.அ.), நச்சிலைக்கூமா (சா.அ.), நச்சிலைக்கூமாமரம் (சி. வை. அ.), நட்சமா (சா. அ.), நட்சமாமரம் (சி.வை.அ.), பர்ணாகம் (சா.அ.), பர்ணாகமரம் (சி.வை.அ.). **(10)**

# செ

கெணத்துப்பூண்டு keṇattuppūṇṭu — பூடுவகை (F. T. C.) A herb; *Tridax procumbens*.

செருப்படித்தழை (F. T. C.)

# கே

கேசுகம் kēcukam — ஒருவகை உணவுக்கிழங்கு (சா. அ.) An edible root.

கேஞ்சலிகை kēñcalikai — கிழங்குவகை (த. மொ. அ.) A kind of root.

கூவலம் பலநிறமுள்ள அல்லி (சா.அ.)
kūvalam Different coloured Indian water-lily.

கூவிரம் மலைமரவகை
''எரிபுரை யெறுழஞ் சுள்ளி கூவிரம்''
(குறிஞ்சிப். 66)
kūviram A mountain tree.

கூழ்முன்னை குத்துச்செடிவகை (மலை.)
kūḻmuṉṉai Ovate-leaved fire brand teak of the Dekhan, shrub; *Premna corymbosa.*

உபதேசிகமரம் (சி.வை.அ.), உபதேசிகை (சா.அ.), கூழாமணி (மலை.), சீரித்தலை (F.T.C.), நல்லபின்னை (F.T.C.).

கூழன்பலா பலாவகை (த. பே. அ.)
kūḻaṉpalā A kind of jack-fruit tree.

குறும்பலா (த. பே. அ.)

கூறுவெளிச் சங்கொடி கொடிவகை ( F. T. C. )
kūṟuveḷic cāṅkoṭi A climber; *Aganosma cymosum.*

செல்லாக்கொடி ( F. T. C. ), மணிமலாங்கொடி ( F. T. C. ).

## கெ

கெந்தகத்தாளி தாளிவகை (சா. அ.)
kentakattāḷi A kind of fragrant ipomoea.

கெந்ததாளி (சா. அ.)

## கே

கேதுபுட்பம் நச்சுக்கிழங்கு வகை (சா. அ.)
kētupuṭpam A poisonous root.

கேதுவசனம் கொடிவகை (த. மொ. அ.)
kētuvacaṉam A creeper.

கேந்துகம் மரவகை (த. மொ. அ.)
kēntukam A tree.

கேரளி மலையாளத்தில் பயிராகும் ஒருவகை நெல் (சா. அ.)
kēraḷi A kind of paddy cultivated in Kerala.

கேழ்வரகு புன்செய்ப்பயிர் வகை (பதார்த்த. 1394)
kēḻvaraku Ragi; *Eleusine coracana.*

## கை

கைதரியம் மரவகை (சா. அ.)
kaitariyam Box myrtle, small or moderate sized tree; *Myrica esculenta.*

கிருஷ்ணகர்ப்பம் (சா. அ.), சவ்வியசி (சா. அ.), சவ்வியசி மரம் (சி. வை. அ.), சிப்பிரகருப்பம் (சா. அ.), மருதம் ( W. I. ).

கைதோணி பூடுவகை (சா. அ.)
kaitōṇi A herb.

கைப்பங் கொட்டை மரவகை (த. பே. அ.)
kaippaṅ koṭṭai Ignatius bean, tree; *Strychnos Ignatii.*

கைப்பான்கொட்டை (சா. அ.)

கைப்புப் பட்டை கசப்புப்பட்டையுள்ள ஆஸ்திரேலிய நாட்டு மரவகை (சா. அ.)
kaippup paṭṭai An Australian tree, with bitter bark; *Alstonia constricta.*

## கொ

கொக்காம் பாளை செடிவகை (த. பே. அ.)
kokkāmpāḷai A plant.

கொக்கான் மரவகை (சா. அ.)
kokkāṉ A tree.

ஆசுரம் (நாமதீப.), ஆரியம் (த. பே. அ.), இரத்த ராசி (சா. அ.), இராகி (த. பே. அ.), இராகிகம் (சா. அ.), இராசிகை (த.பே. அ.), உகாந்தவரகு (சா. அ.), கலுமாரிகம் (சி. வை. அ.), குரக்கன் (மலை.), குறுக்கன் (சா. அ.), கூழ்வரகு (மலை.), கேப்பை (மலை.), கேவர் (சி. வை. அ.), கேவரு (சா. அ.), கேவு (சி.வை.அ.), கேவுரா (சா. அ.), கேவுரு (கு. பா.), நச்சினி (சா.அ.), நஞ்சினி (சா. அ.), பஞ்சந்தாங்கி (சா.அ.), முகி (நாமதீப.354), ராகி (த. பே. அ.). **(22)**

## கை

கையாப்புடை
kaiyāpputai — மரவகை (த. பே. அ.)
Bottle brush or gajeput oil tree, medium tree;
*Melaleuca leucadendron*.

கைரதம்
kairatam — பூடுவகை (சா. அ.)
A herb; *Swertia chirata*.

கைவரைச் சம்பா
kaivaraic campā — சம்பாநெல்வகை (பதார்த்த. 803)
A kind of *campā* paddy.

கைவளச்சம்பா
kaivalaccampā — நல்ல நிறமும் சுவையும் உள்ள சம்பா நெல்வகை (த. பே. அ.)
A species of *campā* paddy with bright colour and pleasant taste.

கைவிரைச்சம்பா (த. பே. அ.)

கைவாட்சம்பா
kaivāṭcampā — நெல்வகை (ஜ-ூ)
A kind of paddy.

## கொ

கொக்கிலை
kokkilai — சிறு மரவகை (சா. அ.)
Lance-leaved wind-berry, small tree;
*Myrsine capitellata*.

கொக்குக்கால்
kokkukkāl — நீர்ப்பூடுவகை (சா. அ.)
An aquatic herb.

கொக்கு
மந்தாரை குத்துச்செடிவகை (த. பே. அ.)
kokkumantārai Taper-pointed mountain ebony, medium shrub ; *Bauhinia acuminata*.

அம்பை (நாமதீப.), கானல்மிரகமரம் (சி.வை.அ.), கானல் மிருகம் (சா. அ.), கொக்கிறகு (புட்ப. 5), கொக்கிறகுமந்தாரை (த. பே. அ.), சிவமல்லி (மலை.), தேவதாரு (சா.அ.), பகம் (சா.அ.), பகரம் (சா. அ.), பகரமரம் (சி. வை. அ.), வெள்ளிறகு மந்தாரை (யாழ். அக.), வெள்ளை மந்தாரம் (த. பே.அ.), வெள்ளைமந்தாரை (த.பே.அ.). (13)

கொகுடி முல்லைக்கொடிவகை (த. பே. அ.)
''நறுந்தண் கொகுடி'' (குறிஞ்சிப்.81)
kokuṭi A variety of jasmine.

கொச்சித்
தமரத்தை சிறுமரவகை (சா.அ.)
koccit tamarattai Bilimby, small tree; *Averrhoa bilimbi*.

இபங்கம் (பிங்.), புளிச்சக்காய் (த. பே. அ.), புளிச்சக்காய்மரம் (த.பே.அ.), புளிச்சா (F.T.C.), புளிமா (த.பே.அ.).

கொச்சிமிளகு கொச்சிநாட்டுமிளகு (சா.அ.)
koccimiḷaku Solid pepper of Cochin.

ஈளமிளகு (சா.அ.)

கொச்சியேலம் கொச்சிநாட்டு ஏலம் (சா.அ.)
kocciyēlam Cochin cardamom.

கொச்சிலித்திப்
புல் பூடுவகை (த.பே.அ.)
koccilittippul Ringworm-killer, herb; *Xyris indica*.

கொச்சிலிச்சி (சா.அ.), கொச்சிலித்தி (சா.அ.), கொச்சிலித்துப்புல் (மூ.வை.அ.).

கொசுகுதலை நெல்வகை (த.பே.அ.)
kocukutalai A kind of paddy.

கொட்டணை ஈரமான நிலங்களில் வளரும் ஒரு பூடு (சா.அ.)
koṭṭaṇai A herb growing in marshy places.

கொட்டணைக்காய் (சா.அ.)

**கொட்டாங் கோரை** கோரைவகை (த.பே.அ.)
kottāṅkōrai A kind of sedge.

**கொட்டாஞ்சி** ஒருவகைப்பழம் (சா.அ.)
kottāñci A kind of fruit.

கொடுவாஞ்சி (சா.அ.), கொடுவாஞ்சிப்பழம் (சி.வை.அ.).

**கொட்டி** நீர்ப்பூடுவகை
''கொட்டியு மாம்பலு நெய்தலும்''
(வாக்குண்.17)
kotti An aquatic herb; *Aponogeton natans*.

அம்மட்டி (பச்.மூ.), அல்லியம் (மலை.), கசேருகம் (நாமதீப.), கபித்தம் (சா.அ.), குளக்கொட்டி (த. பே. அ.).

**கொட்டிக் கிழங்கு** கொட்டியின் கிழங்கு (சி. வை. அ.)
kottikkilaṅku Root of *Aponogeton natans*, (*kotti*).

அம்மாட்டி (சா. அ.), அல்லிக்கிழங்கு (சா. அ.), அல்லியக்கிழங்கு (சா. அ.), உதும்பரசிதக்கிழங்கு (சி. வை. அ.), உதும்பரசிதம் (சா. அ.), எலாக் கொட்டி (சா. அ.), எலாக்கொட்டிக்கிழங்கு (சி. வை.அ.), கண்மாய்க்கிழங்கு (சா.அ.), கண்மாய்க் கொட்டி (சா. அ.), கொட்டைமூலம் (சா. அ.), கோபாபத்திரம் (சா. அ.), சித்தி (சா.அ.), சித்திக் கிழங்கு (சி. வை. அ.), நைசியக்கொட்டி (சி. வை. அ.), நைசியம் (சா. அ.), மெதுவாசக்கிழங்கு (சி. வை. அ.), மெதுவாசம் (சா. அ.), லோத்திரக் கிழங்கு (சி.வை.அ.), லோத்திரம் (சா.அ.). **(19)**

**கொட்டைக் கரந்தை** பூடுவகை (த. பே. அ.)
kottaik karantai East Indian globe thistle, herb ; *Sphaeranthus indicus*.

ஆனந்தை (சா.அ.), உண்டி (தைலவ.தைல.76), கரந்தை (பதிற்றுப்.40.5), கல்லகாரகி (சா. அ.), கல்லகாரகிச்செடி (சி. வை. அ.), கிரந்தினி (சா. அ.), குளத்தி (சா.அ.), கொட்டாங்கரந்தை (யாழ். அக.), கொட்டான்கரந்தை (சி.வை.அ.), கொட்டை நாளம் (சா.அ.), கொட்டைப்பாமிரச்செடி (சி.வை. அ.), கொட்டைப்பாமிரம் (சா. அ.), கொட்டைப் பாலை (சா. அ.), கொட்டையிலை (சங். அக.), கோடாரிக்கரந்தை (சா. அ.), கோடாலிக்கரந்தை (த. பே. அ.), சமனி (சா. அ.), சித்தகன்னி (சா. அ.), சிரவணி (சா. அ.), சிவப்புக்கொட்டைக்

கரந்தை (சா. அ.), சிவன்முடிசெல்வி (சா. அ.), சீதரணம் (சா. அ.), சீதாப்பிரியம் (சா. அ.), சீதாபிரியம் (சா. அ.), சுகந்தினி (சா. அ.), செங்கொட்டான் கரந்தை (சா. அ.), செங்கொட்டைக் கரந்தை (சா. அ.), தட்டை (சா. அ.), திருவாக்கினிப்பூடு (சா.அ.), தொண்டுப்பூக்கொடி (சா.அ.), தோண்டி (சங். அக.), நனையாவிருட்டி (சா.அ.), நாறுகரந்தை (குறிஞ்சிப். 76 உரை), பரிமளி (சா. அ.), பல்லாதாரினி (சா.அ.), பல்லாதாரினிச்செடி (சி. வை. அ.), பிராசித்தா (சா.அ.), புட்பகி (சா. அ.), புட்பகிக்கொட்டை (சி. வை. அ.), புட்பகொரித்தாரு (சா. அ.), பெடகருவாள் (சா. அ.), பெண்டமுதமூலி (சா.அ.), பெருகரந்தை (சா.அ.), மாசித்தகன்னி (சா.அ.), மாசுமங்கையர் (சா.அ.), மிலாங்கலி (சா.அ.), முண்டனி (சா.அ.), முன்மனி (சா. அ.), மொட்டைபாப்பாத்தி (F. T. C.), வகோரகண்டன் (சா.அ.), வாலமாதரை (சா.அ.), விட்டுணுகரந்தை (த. பே. அ.), விஷ்ணுகரந்தை (த. பே. அ.), வெண்சீடம் (சா. அ.). **(54)**

கொட்டைக் காய்ச்சி[1] தென்னைவகை (சா. அ.)
koṭṭaikkāycci A kind of coconut.

கொட்டைக் காய்ச்சி[2] சதைப்பற்று அதிகமின்றிக்கொட்டை பருத்துள்ள காய்காய்க்கும் மாமரவகை (சா. அ.)
koṭṭaikkāycci A species of mango yielding fruits of large shone with a small quality of pulp.

கொட்டைப் பாசி நீர்ப்பாசிவகை
"கொட்டைப்பாசியின் வேரையொத்த சிதரின சீரையை"
(பெரும்பாண். 468 உரை)
koṭṭaippāci A kind of water moss.

அந்துவாசம் (மூ. அ.), ஆகாசத்தாமரை (மூ. அ.), ஆகாசதானம் (சா. அ.), ஆகாயத்தாமரை (சங். அக.), ஆகாயமூலி (சங். அக.), ஆமலகமலம் (மலை.), செவியாமப்பாசி (சி. வை. அ.), செவியாமம் (சா.அ.), பயிருகம் (மலை.), பழம்பாசி (மூ. அ.), பாசிவரமாசு (சா. அ.), மாசவாருள்ளி (சா.அ.), வாடபூமாதுமூலி (சா. அ.). **(13)**

கொட்டை யாசாசி கொடிவகை (த. பே. அ.)
koṭṭaiyācāci Glaucous-backed round leaved moon seed, medium climber;
*Diploclisia glaucescens*.

கொட்டையாகாசி (சா. அ.), மொரசாங்கொடி (F. T. C.).

**கொட்டை யிலந்தை** இலந்தை மரவகை (த.பே.அ.)
**koṭṭaiyilantai** Woody-fruited jujube, small tree; *Ziziphus xylopyrus.*

கடல்சிரை (சா. அ.), கொட்டை (W. I.), கொட்டை இலந்தை (F. T. C.), முள்ளுக்குப்பை (சா.அ.), முள்ளுடுப்பை (த.பே.அ.).

**கொட்டை வாழை** கொட்டை மிகுந்த கனிகளையுடைய வாழை (த.பே.அ.)
**koṭṭaivāḻai** A kind of plantain yielding seedful fruits.

இலைவாழை (த.பே.அ.)

**கொடிஒட்டை** குத்துச்செடிவகை (F.T.C.)
**koṭi oṭṭai** A shrub; *Pseudarthria viscida.*

**கொடிக்கள்ளி**[1] கொடிவகை (பதார்த்த. 124)
**koṭikkaḷḷi** Break-flowered creeping milk hedge, climber; *Sarcostemma intermedium.*

இந்துவல்லி (சா.அ.), இபேகநாதமூலி (சா.அ.), ஈனவக்கிரக்கொடி (சி. வை. அ.), ஈனவக்கிரம் (சா.அ.), ஊர்க்கள்ளி (சா.அ.), குருமுனியமுகி (சா.அ.), கொழுந்துடைமாது (சா. அ.), சிங்க விருட்சம் (சா.அ.), தானுவனமூலி (சா.அ.), திலகி (சா.அ.), திலகிக்கொடி (சி.வை.அ.), மகா விருட்சம் (சா.அ.), வெந்துருதாசை(சா.அ.). **(13)**

**கொடிக்கள்ளி**[2] படர்குத்துச்செடிவகை (த.பே.அ.)
**koṭikkaḷḷi** Moon-creeper, trailing shrub; *Sarcostemma brevestigma.*

ஈயத்தை நாசமாக்கி (சா.அ.), ஈனவக்கிரம் (சா. அ.), ஏரலி (சா.அ.), ஏரலிக்கொடி (சி.வை.அ.), களிப்புக்கள்ளி (சா.அ.), குன்மவல்லி (சா.அ.), கொடிவிருட்சம் (சா.அ.), சோமம் (சா. அ.), சோறி (சா. அ.), தீட்சணி (சா. அ.), பாலினி (சா.அ.), பாலுக்குள் சூதங்கட்டி (சா.அ.), பாற் பாதி (சா.அ.), பாற்பாதிக்கொடி (சி.வை.அ.), வாதநாசனி (சா. அ.), வாதனாசனி (சா.அ.), விரோசனி (சா.அ.). **(17)**

கொடிக்
காக்கட்டான் காக்கட்டான்வகை (த.பே.அ.)
koṭik kākkaṭṭāṉ Indian jalap, sky-blue bind weed, medium climber; *Ipomoea nil*.

காக்கட்டான் (த.பே.அ.), காக்கணங்கொடி (சா.அ.), சிரிக்கி (சா.அ.).

கொடிக்
குருந்து[1] குத்துச்செடிவகை (F.T.C.)
koṭikkuruntu A shrub; *Glyptopetalum lawsonii*.

கொடிக்
குருந்து[2] குத்துச்செடிவகை (F.T.C.)
koṭikkuruntu A shrub; *Asystasia chelonoides*.

கொடிகம் பூடுவகை (சா.அ.)
koṭikam Horse - shoe fenugreek, herb; *Trigonella corniculata*.

நகபுட்பி (சா.அ.)

கொடிச்சம்பங்கி கொடிவகை (த.பே.அ.)
koṭiccampaṅki Indian cowslip creeper; *Telosma minor*.

அதிமொக்கு (சா.அ.), அழகுசம்பங்கி (சா.அ.), ஆண்மதப்பூ (சா.அ.), ஆலப்பூ (சா.அ.), ஆலாதிமொக்கு (சா. அ.), கருஞ்சூகக்கொடி (சி. வை. அ.), கருஞ்சூகம் (சா.அ.), காமப்பூ (மலை.), கிருட்டிணசோபிதக்கொடி (சி. வை. அ.), கிருட்டிணசோபிதம் (சா. அ.), கொடிச்சண்பகம் (த.பே.அ.), கொடிப்பூகச்செடி (சி. வை. அ.), கொடிப்பூகம் (சா.அ.), கொடிவடாகிகம் (சா.அ.), கொடிவடாகிதம் (சி. வை. அ.), சண்பகம் (சா. அ.), சம்பங்கி (த. பே. அ.), சீதாமனோகரம் (த. பே. அ.), சீரகபாதிதப்பூ (சி. வை. அ.), சீரகபாதிதம் (சா. அ.), சுகந்தம் (த. பே. அ.), தொங்கிப்பூ (த. பே. அ.), படர்செண்பகக்கொடி (சி. வை. அ.), படர்செண்பகம் (சா. அ.), பத்திராசிரக்கொடி (சி.வை. அ.), பத்திராசிரம் (சா.அ.), பைதிருதி (சா. அ.), பைதிருதிக்கொடி (சி. வை. அ.), மதனகாமப்பூ (த.பே.அ.), மதனகாமியப்பூ (சா. அ.), மதனகைமலர் (சா. அ.), வீழ்வேயக்கொடி (சி. வை. அ.), வீழ்வேயம் (சா. அ.), வேரிணக்கி (சா. அ.), வேரிணக்கிக் கொடி (சி. வை. அ.). **(35)**

கொடித்தடக்கி மரவகை (மு. அ.)
koṭittaṭakki A tree.

**கொடித்துத்தி** துத்தி வகை (த. பே. அ.)
**koṭittutti** Membranous carpelled evening-mallow, medium shrub; *Abutilon crispum*.

அதிபலா (சா.அ.), கலைதவத்துத்தி (சி.வை.அ.), களைதவம் (சா. அ.), சக்கராபந்தச்செடி (சி. வை. அ.), சக்கராபந்தம் (சா. அ.), சிறுதுத்தி (த. பே. அ.), தாம்பூலித்துத்தி (சி.வை.அ.), தாம்பூலீ (சா. அ.), தாளினி (சா. அ.), தாளினித்துத்தி (சி. வை. அ.). **(10)**

**கொடிநாவல்** நாவல்வகை (த. பே. அ.)
**koṭināval** A species of jambolanum.

இரைதவம் (சா.அ.), இரைதவமரம் (சி.வை.அ.), குளநாவல் (சா.அ.), குளநாவல்மரம் (சி.வை.அ), தாம்பூரி (சா.அ.), தாம்பூரிநவ்வல் (சி. வை. அ.), வீறுகநவ்வல் (சி. வை. அ.), வீறுகம் (சா. அ.).

**கொடிநெல்லி** தமிழ்மருத்துவத்தில் மிகச்சிறப்பாகப் பேசப்படும் ஒருகாயசித்திமூலிகை (சா. அ.)
**koṭinelli** A rare rejuvenating plant the virtues of which are greatly ex-tolled in Tamil medicine.

இனிப்புக்கொடிமுங்கிகம் (சி.வை.அ.), இனிப்பு முங்கிகம் (சா. அ.), கண்ணுக்கேற்றமரம் (சி. வை. அ.), கண்ணுக்கேற்றாள் (சா. அ.), கள்ளக்கடவி (சா. அ.), கள்ளக்கடவிமரம் (சி.வை. அ.), கொடிநாக்கி (சா.அ.), கொடிநாக்கிமரம் (சி. வை.அ.), சூதத்தைமணியாக்கி (சா.அ.), தாமலகா (சா.அ.), தாமலகாநெல்லி (சி.வை.அ.), தெண்ட பாணி (சா. அ.), தைவசம் (சா. அ.), படர்நெல்லி (சா. அ.), பாண்டச்சம் (சா. அ.), மிருகவின்னா (சா.அ.), மூலா (சா அ.). **(17)**

**கொடிப்பசலை** கொடிவகை (த. பே. அ.)
**koṭippacalai** Heart-leaved Malabar night-shade, medium climber; *Basella cordifolia*.

அபோதகம் (சா. அ.), கலப்பி (ஜ-ு), கலம்பி (மலை.), குத்துப்பசளை (த. பே. அ.), குபோதகி (சா. அ.), கொடிப்பசளை (த. பே. அ.), கொடி வசலை (சா. அ.), கொடிவசலைக்கீரை (சி. வை. அ.), கொடிவயலை (த.பே.அ.), கொத்துப்பசலை (சா. அ.), கொத்துப்பசளை (த.பே.அ.), கொத்து வசளை (சா. அ.), பசளை (சா. அ.), புதுப்பசளை (த.பே.அ.), விசாதப்பசளைக்கொடி (சி.வை.அ.), விசாதம் (சா.அ.). **(16)**

**கொடிப் பலாசம்** காட்டுக்கொடிவகை (சா. அ.)
kotippalācam Palaus climber ; *Butea superba.*

கொடிமுறுக்கம் (சா. அ.)

**கொடிப்பாசி** நீர்ப்பாசிவகை (த. பே. அ.)
koṭippāci A kind of moss creeping upon water ; *Hydrilla verticillata.*

இரைப்புகாப்பாசி (சா. அ.), கிரிமல்லி (சா. அ.), கிரிமல்லிப்பாசி (சி.வை.அ.), குதிரைவாலிகம் (சா. அ.), குதிரைவாலிகாக்கொடி (சி. வை. அ.), சமீரணப்பாசி (சி. வை. அ.), சமீரணம் (சா. அ.), சிகாவலகம் (சா.அ.), சிம்பகா (சா. அ.), சுனைப் பாசி (சா. அ.), பழம்பாசி (சா. அ.), பழம்பாசிக் கொடி (சி. வை. அ.), பனப்பாசி (சா. அ.), பனப்பாசிக்கொடி (சி.வை.அ.), பீனம் (சங்.அக.), பீனம்பாசிக்கொடி (சி. வை.அ.), வகுத்தாலப்பாசி (சி.வை.அ.), வகுத்தாலம் (சா. அ.). **(18)**

**கொடிப்பாலை** பெருங்கொடிவகை (த. பே. அ.)
koṭippālai Green wax flower, large twinging shrub ; *Wattakaka volubilis.*

ஆயப்பாலை (சா. அ.), ஆறம் (சா. அ.), இரசகம் (சா. அ.), இருவிகம் (சா. அ.), கணத்தாதிசாரம் (சா. அ.), கமல் (சா. அ.), கரிப்பாலை (சா. அ.), கரிப்போகி (சா. அ.), கரிப்போகிமரம் (சி. வை. அ.), கரிலம் (சா. அ.), கரிலமரம் (சி. வை. அ.), காசாவிருட்சம் (சா. அ.), காட்டுஆவாரங்கொடி (F.T.C.), குடசப்பாலை (த. பே. அ.), குறிஞ்சா (த.பே.அ.), கொடிவசலி (சா. அ.), கொடிவசலிப் பாலை (சி. வை. அ.), கொண்டச்சாணி (சா.அ.), கொண்டைச்சாணி (சா. அ.), கோடிப்பாலை (சிலப். 3.71 அடிக்குறிப்பு), சிங்கிட்டம் (மூ. அ.), சிங்கிடாப்பாலை (சா. அ.), சிங்கிரம் (மலை.), சிவந்தி (மலை.), சிவந்திதப்பாலை (சி.வை.அ.), சிவந்திதம் (சா. அ.), சீவந்தி (மலை.), தித்திப்புப் பாலை (சா. அ.), தீம்பாலை (சா. அ.), நச்சுறுப் பான் (சா. அ.), நஞ்சறப்பாய்ஞ்சான் (சங். அக.), நஞ்சறப்பாய்ஞ்சான்கொடி (சி.வை.அ.), நஞ்சறப் பாய்ந்தான் (சா. அ.), நஞ்சறுகி (சா. அ.), நஞ்சறுகிப்பாலைக்கொடி (சி. வை. அ.), நஞ்சறுப் பான் (த.பே.அ.), நஞ்சுமுறிச்சான் (யாழ். அக.), நஞ்சுமுறித்தான் (சா.அ.), நல்லபாலை (சா.அ.), நாகப்பாலை (சா. அ.), பால்ஒடுவை (சா. அ.), பாலை (த. பே. அ.), பாலொடுவை (சா. அ.), பாற்குழப்பம் (சா. அ.), பாற்குழப்பமரம் (சி. வை. அ.), மதுரசப்பாத்து (சா. அ.), மதுரசப்பாலை (சா.அ.) வனதித்தம் (மலை.). **(48)**

கொடிப்பிரட்டி பூடுவகை (சா. அ.)
kotippiratti A herb.

கொடிப்புன்கு பெருங்கொடிவகை (த.பே.அ.)
kotippunku Hog creeper; *Derris scandens.*

ஆணைக்கட்டு (I.M.P.), காஞ்சனி (சா. அ.), காஞ்சனிப்புங்கு (சி. வை. அ.), குபேராட்சி (சா. அ.), கொடிப்புங்கு (சா. அ.), கொத்துபுங்கன் (சா.அ.), கோனிற்கொடி (சா. அ.), சரபுங்கு (சா.அ.), திரணி (சா.அ.), திரணை (I.M.P.), தெகில் (F.T.C.), தெகிள் (த.பே.அ.), புளியங் கொடி (த.பே.அ.), புனலிக்கொடி (த.பே.அ.), பொனிலி (F.T C.), முயல்வல்லி (சா.அ.), வச்சிர பீசகம் (மு.அ.). **(17)**

கொடிமந்தாரை கொடிவகை (சா.அ.)
kotimantārai Climbing mountain ebony, climber; *Bauhinia phoenicea.*

கொடிமாதுளை மரவகை (மு.அ.)
kotimātuḷai Lemon citron, medium tree; *Limonia medica*

அந்தரஞ்சனம் (சா.அ.), ஆலாவட்டம் (சா.அ.), காட்டலாகிரி (சா.அ.), காட்டலாகிரிமரம் (சி.வை. அ.), கெபூரமயம் (சா.அ.), கொடிமணி (சா.அ.), கொடிமணிமரம் (சி. வை. அ.), கொடிமாதளை (மு.வை.அ.), கொடிமாதளைமரம் (சி.வை.அ.), கொம்மட்டிமாதுளை (சா.அ.), சீதளங்காய் (த. பே.அ.), சீதளம் (சா.அ.), சீதளமரம் (சி.வை. அ.), சீதளை (மலை.), தாசிகா (சா.அ.), தாசிகா மரம் (சி.வை.அ.), துரிஞ்சி (சா. அ.), நாலாங் காண்டம் (சா.அ.), பீசபூரம் (சா.அ.), பூரந்தனம் (சா.அ.), மருமாதுளை (சா.அ.), மாதீபலம் (சா. அ.), மாதுலங்கம் (சா.அ.), வடிதங்கொடி (சா. அ.), வானோதயம் (சா. அ.), விசபூரகம் (சா. அ.). **(26)**

கொடிமுன்னை கொடிவகை (த. பே. அ.)
kotimuṇṇai Pointed-leaved hog weed, small climber ; *Commicarpus chinensis.*

காட்டதாதி (சா.அ.), காட்டதாதிக்கொடி (சி.வை. அ.), குனாவகச்செடி (சி. வை. அ.), குனாவகம் (சா. அ.), கூத்தன்குதம்பை (பாலவா. 508), கூத்தன்குதம்பைப்பூண்டு (சி. வை. அ.), கொடி மின்னை (சா. அ.), கொடிமுன்னிகம் (சா. அ.), சட்டிசாட்டரணை (த. பே. அ.), சாட்டரணை (மலை.), படர்முன்னை (சா. அ.), மூக்குத்தி

(த.பே.அ.), மூக்கொற்றி (த.பே.அ.), வராகப்பூடு (சா. அ.), வராகரப்பூடு (சி. வை. அ.), வராகன் பூடு (மலை.), வராகன்பூண்டு (த.பே.அ.). (17)

கொடியத்தி அத்திவகை (சா. அ.)
koṭiyatti Creeper fig tree ;
*Ficus heterophylla.*

அவனம் (சா.அ.), காட்டாதாரிகம் (சா.அ.).

கொடியரசு அரசுவகை (த. பே. அ.)
koṭiyaracu Tailed or wild pipal, medium tree ;
*Ficus arnottiana.*

கருங்குமிரி (சா. அ.), கல்லரசி (சா. அ.), கல்லரசு (த.பே.அ.), காகோளி (த. பே. அ.), கொடிஅரசு (F.T.C.), கோண்டகை (சா.அ.), கோண்டகையரசு மரம் (சி. வை. அ.), கோழிக்கால் (மலை.), சிராட்டியாசம் (சா. அ.), தனவான் (சா. அ.), தனவான்மரம் (சி.வை.அ.), தேவவரசு (சா.அ.). (12)

கொடி யழிஞ்சில் அழிஞ்சில்வகை (சா. அ.)
koṭiyaḻiñcil A kind of alangium.

கல்தாமிகம் (சா. அ.), கூவழிஞ்சி (சி. வை. அ.), கூவழிஞ்சில் (சா. அ.).

கொடியறுகு அறுகுவகை (த. பே. அ.)
koṭiyaṟuku A kind of hairy or couch grass.

சகுலாட்சம் (த.மொ.அ.), தளகாதிகம் (சா. அ.), தளகாதிகவறுகு (சி. வை. அ.).

கொடியால் ஆலமரவகை (த. பே. அ.)
koṭiyāl A kind of banyan.

கொடி யூமத்தை ஊமத்தைச்செடிவகை (சா. அ.)
koṭiyūmattai A plant of the *Datura* genus.

தழுக்கூமத்தை (சா.அ.), துத்தமப்பூவிதம் (சா.அ.).

கொடி யெலுமிச்சை எலுமிச்சை வகை (பதார்த்த.678)
koṭiyelumiccai Italian lemon, small tree ;
*Citrus medica limonum.*

கெளிரியெலுமிச்சை (சா. அ.), சம்பம் (சா. அ.), சான்றோன்மூலி (சா. அ.), சான்றோன்மூலிகை (சி. வை. அ.), சிதம்பர எலுமிச்சை (சா. அ.), சிதம்பரவெலுமிச்சை (த. பே. அ.), தாதுமூரிதம் (சா. அ.), தாதுமூரிதமரம் (சி.வை.அ.), துரிஞ்சி (த.பே.அ.), பெரிய எலுமிச்சை (சா. அ.), பெருந்தேசி (சா. அ.), பெருவெலுமிச்சை (சா. அ.), பேரெலுமிச்சை (த. பே. அ.), மாதுலங்கம் (சா. அ.), மாதுளை (யாழ். அக.), முருக்கு (த.பே.அ.), யானையெலுமிச்சை (சா.அ.), விகசிதம் (சா.அ.), விகசிதமிச்சை (சி. வை. அ.). **(19)**

கொடிரோஸ் ரோஜாவகை (F.T.C.)
koṭirōs Coral creeper ; *Antigonon leptopus.*

கொடிவிரை குத்துச்செடிவகை (சா. அ.)
koṭivirai A shrub ; *Reinwardtia trigyna.*

கொடிவேலன் மரவகை (த.பே.அ.)
koṭivēlan American sumach or dividivi, small tree; *Caesalpinia coriaria.*

இங்கிமரம் (F.T.C.), கொடிச்சிதம் (சா. அ.), கொடிச்சீத்தல் (சா.அ.), கொடிவேல் (சா. அ.), கொடிவேலம் (சா.அ.), கோணக்காய் (I.M.P.), கோணபுளி (F.T.C.), கோணல்காய் (சா. அ.), கோணவேல் (த.பே.அ.), கோணவேலன் (த.பே.அ.), கோணற்காய் (சா. அ.), கோணைவேல் (சா.அ.), திவிடிக்காய் (சா.அ.), திவிதிவி (த.பே.அ.), முள்ளில்லாதவேல் (I.M.P.). **(15)**

கொடுக்காய்ப்புளி மரவகை (த.பே.அ.)
koṭukkāyppuḷi Manilla tamarind, medium tree; *Pithecellobium dulce.*

இங்கா (சா.அ.), உப்புக்குறுதி (சா.அ.), உருசிகரம் (சா.அ.), காட்டுப்புளி (சா. அ.), கொடுக்காய் (த.பே.அ.), கொடுக்காப்புளி (F.T.C.), கொரிகா (சா.அ.), கொரிகாமரம் (சி.வை.அ.), கொருக்காப்புளி (த.பே.அ.), கொறுக்கா (மலை.), கொறுக்காய் (த. பே. அ.), கொறுக்காய்ப்புளி (த.பே.அ.), கோணப்புளி (த.பே.அ.), கோணி (சா.அ.), சிகாண்டகம் (சா.அ.), சிகாண்டகமரம் (சி.வை.அ.), சீமைச்சிந்துகம் (சா. அ.), சீமைப்புளி (சா. அ.), சுங்கதாரி (சா. அ.), சுங்கதாரிமரம் (சி.வை.அ.), சுண்ணமானோன் (சா.அ.), தராசதம் (சா.அ.), தராசதமரம் (சி. வை. அ.), தீபனம் (சா.அ.), தீவனம் (சா. அ.), நரைமீதி (சா.அ.), பழம்புளி (சா.அ.), பறங்கிக்கொறுக்

காய்ப்புளி (சா. அ.), பறங்கிக்கொறுக்கைப்புளி (சி.வை.அ.), பீசமலம் (சா.அ.), வெடியுப்புக் கட்டி (சா.அ.), வேக்கா (சா.அ.). (32)

கொடும்பை பசுமையான பூடுவகை (அக.நி.)
koṭumpai A kind of evergreen herb.

கொடுவேலி சூத்துச்செடிவகை (மலை.)
koṭuvēli Ceylon lead wort, sub shrub; *Plumbago zeylanica.*

அகனாதி (சி. வை. அ.), அகனாதிச்செடி (சி. வை. அ.), அகனாதிதம் (சா. அ.), அணிஞ்சகச் செடி (சி.வை.அ.), அணிஞ்சகம் (சா.அ.), அணிஞ்சில் (மலை), அதிகநாரி (மலை.), அதிகநாலச்செடி (சி. வை. அ.), அதிகநாலம் (சா.அ.), அதிகநாறி (சா. அ.), அதிகற்றாதி (மலை.), அதிகாரி (பச். மூ.), அதிசனசி (சா. அ.), அதிபதிங்கி (சா. அ.), அதிபதிங்கிச்செடி (சி.வை.அ.), அதிபதிஞ்சி (சா. அ.), அதிபதுங்கி (மூ. அ.), அதிபதுங்கைச் செடி (சி. வை. அ.), அதினாதிப்பூண்டு (சா.அ.), அதல் (சா. அ.), அரி (சா. அ.), அருணவேலி (சி. வை. அ.), அழல் (சா. அ.), அழற்சூடி (சா. அ.), அனல் (தைலவ. தைல. 129), அனலம் (தைலவ. தைல. 135), ஆங்காரசத்தி (சா. அ.), ஆண்கொடிவேலி (சா. அ.), ஆதிமகாமூலி (சா. அ.), இலதைவன்னி (தைலவ. தைல. 43), உக்கன் (மூ. வை. அ.), உடல்வேதிச்சி (சா. அ.), உதகவன் (சா. அ.), உதங்கன் (சா. அ.), உதாசனம் (சா. அ.), உதாசனன் (மூ. அ.), உமிழ்நீர்ப் பெருக்கி (சா. அ.), எரி (சா. அ.), எழுநா (சா. அ.), எழுநாச்செடி (சி. வை. அ.), ஒலி (சா. அ.), ஒலிகம் (சா. அ.), ஒலிகைச்செடி (சி. வை. அ.), கல் (சா. அ.), கனலி (மலை.), கானீலம் (சா. அ.), காரிகை (சா. அ.), காரிமை (மலை.), காரீமை (சா.அ.), காவிக்கருப்பி (சா. அ.), கான லிந்திரன்கொடி (சி.வை.அ.), கானலிந்திரன் (சா.அ.), கானிலம் (மலை.), கூரியவன்னி (சங். அக.), கொடிச்சி (மலை.), கெடித்தீ (சா. அ.), கொடியதகம் (சா.அ.), கொடிவேர் (சா. அ.), கொடிவேலி (பதார்த்த. 494), கொடுநாலி (சா. அ.), கொடுநாவி (சி.வை.அ.), கொடுநாவிச்செடி (சி. வை. அ.), கொடுவேரி (குறிஞ்சிப். 64), கொழு (சா. அ.), கோணுங்காகலம் (சா. அ), கோமுச்சிரவல்லி (சா. அ.), சத்தி (சா. அ.), சதாவேதா(மலை.), சதாவேதை (சா.அ.), சாத்துவாதி (சா. அ.), சித்தர்மூலம் (த. பே. அ.), சித்தர்மூலி (த. பே. அ.), சித்திமூலம் (சா. அ.), சித்திரக் கொடி (சா. அ.), சித்திரகச்செடி (சி. வை. அ.), சித்திரகம் (மலை.), சித்திரதம் (சா. அ.), சித்திரம் (த. பே. அ.), சித்திரமூலம் (பிங்.),

சிலைமண் (சா. அ.), சிவம் (சா. அ.), சுசி (தைலவ. தைல. 73), சுவாமினி (சா. அ.), செருக்கன் (சா. அ.), செருக்கன்வேலிச்செடி (சி. வை. அ.), சோதிகாந்தம் (சா. அ.), ஞெகிழி (மலை.), தணலாகினி (சா. அ.), தணலாகினிச் செடி (சி.வை.அ.), தணலாற்றி (சா.அ.), தபனகச் செடி (சி. வை. அ.), தபனகம் (சா. அ.), தபனன் (மலை.), தமரகி (சா. அ.), தமரகிச்செடி (சி.வை. அ.), தருவணவக்கினி (சா. அ.), தழல் (மலை.), தழற்கொடி (சா. அ.), தனுப்தம் (சா. அ.), தாகம் (சா. அ.), திக்கு (மலை.), திகனா (சா. அ.), திகனாதி (சா.அ.), திகனாதிச்செடி (சி.வை.அ.), திசைநா (மலை.), திசைநாச்செடி (சி. வை. அ.), திவிபிநாபக்கொடி (சி.வை.அ.), திவிபிநாபம் (சா. அ.), திவிபிநாமம் (தைலவ. தைல. 4), துவயாக் கினி (சா. அ.), நடக்கையறிவாள் (சா. அ.), நெருப்புமூலி (சா. அ.), பகப்பாதி (சா. அ.), பாடிமை (சா.அ.), பாடீநம் (ஜ.சி), பாடீனம் (சா. அ.), மகந்தம் (ஜ.சி), மகரதச்செடி (சி.வை.அ.), மகரதம் (சா. அ.), மகருதம் (மலை ), வங்கி (சங். அக.), வச்சகாரம் (மூ.வை.அ.), வசகம் (மலை.), வசங்கம் (சா. அ.), வஞ்சகாசுரம் (மலை.), வஞ்ச காரம் (மலை.), வஞ்சிரா (சா. அ.), வஞ்சிராச் செடி (சி. வை. அ.), வல்லிவன்னி (தைலவ.), வறாளம் (சா. அ.), வன்னி (சா. அ.), வன்னிப் பிரியச்செடி (சி.வை.அ.), வன்னிப்பிரியம் (மலை.), வன்னிபிலியம் (மலை.), வனமா (த. பே. அ.), வனமாசச்செடி (சி.வை.அ.), வனமாசம் (சா.அ.), வாளகச்சிகை (சா. அ.), வீரதத்துவம் (சா. அ.), வெண்கொடிமூலம் (சா. அ.), வெண்கொடிவேலி (சங். அக.), வெண்சித்திரமூலம் (சா. அ.), வெள்ளைக்கொடிவேலி (சா. அ.), வெள்ளைக் கொடுவேலி (த.பே.அ.), வெள்ளைச்சித்திரமூலம் (சா. அ.), வேலி (சா. அ.). **(146)**

கொத்தமல்லி செடிவகை (த. பே. அ.)
kottamalli Coriandar plant ; *Coriandrum sativum.*

அரிதாரவஞ்சி (சா. அ.), அவாரிகா (சா. அ.), அறைநீலி (சா. அ.), இருதயகந்தம் (சா. அ.), உத்தம்பரி (த.பே.அ.), உந்தமபரி (சா. அ.), உரி (மலை.), உரிணி (சா. அ.), உரிணிச்செடி (சி. வை. அ.), உருள்அரிசி (திவா.), உரையிசுழி (சா. அ.), உறி (சா. அ.), கருஞ்செங்கை (சா. அ.), காசுகாதி (சா. அ.), காசுகாதிமல்லி (சி.வை.அ.), குளிர்மாதி (சா. அ.), கொத்தம் (சங். அக.), கொத்தமல்லிச்செடி (சி. வை. அ.), கொத்தமுரி (இறை. 2 உரை), கொத்துமல்மி (த. பே. அ.), கொத்துமலி (பிங்.), சுவாசாக்கினி (சா. அ.), குக்குமபத்திரம் (த. பே. அ.), தக்காளியம் (சா. அ.), தனத்தனியம் (சா. அ.), தனிகம் (மலை.),

தனிகமல்லி (சி. வை. அ.), தனிகா (மலை.), தனிகாக்கி (சா. அ.), தனிசா (மூ. வை. அ.), தனித்தாலிகம் (சா. அ.), தனியா (மலை.), தனியான் (சா. அ.), தாநகச்செடி (சி. வை. அ.), தாநகம் (சா. அ.), தாநாகம் (சா. அ.), தாநி (ஜ0), தானகம் (சா. அ.), தானகமல்லி (சி. வை. அ.), தானாகம் (சா. அ.), தானிகம் (மலை.), தானிகை (தைலவ.தைல.), தானியகம் (சா. அ.), தானியம் (மலை.), தானியராசன் (சங். அக.), தானியாகம் (ஜ0), தீட்சணகல்கம் (சா. அ.), தீட்சணபத்திரம் (சா. அ.), தீட்சணபலை (சா. அ.), தும்புரு (சா. அ.), துவிசம் (சா. அ.), தேனி (சா.அ.), தேனிகை (சா. அ.), தேனுகம் (சா. அ.), நடமாதிரை (சா. அ.), நவு (சா. அ.), மல்லி (த. பே. அ.), மூடி (மலை.), வாசந்திரம் (சா. அ.), வாசந்திரமல்லி (சி. வை. அ.). **(60)**

கொத்தலரி — அரளி வகை (த.பே.அ.)
kottalari — Pink kopsia, large evergreen shrub; *Kopsia fruticosa.*

கொத்தவரை — குத்துச்செடிவகை (பதார்த்த. 688)
kottavarai — Cluster-bean, shrub; *Cyamopsis tetragonoloba.*

அத்தித்தேக்கி (சா. அ.), அத்தித்தேக்கிச்செடி (சி. வை. அ.), கவலிகச்செடி (சி. வை. அ.), கவலிகம் (சா.அ.), களாசகச்செடி (சி.வை.அ.), களாசகம் (சா. அ.), காஞ்சனமாலிதச்செடி (சி. வை. அ.), காஞ்சனமாலிதம் (சா. அ.), சிறுகொத்தவரை (சி. வை. அ.), சிறுசேவிகச்செடி (சி.வை.அ.), சீனிக்கொத்தவரை (சா.அ.), சீனியவரை (கு.பா.), சுக்குமி (சா.அ.), சுக்குமியவரை (சி.வை.அ.), செடியவரை (சா. அ.), நளகுகா (சா. அ.), நளகுகாவவரை (சி.வை.அ.), நிலகிக்கொத்தவரை (சா.அ.). **(18)**

கொத்தான் வாகை — வாகைவகை (பு. வெ. 8, 2 கொளு, உரை.)
kottāṉvākai — A kind of sirissa.

கொத்துக் கடம்பை — குத்துச்செடிவகை (சா.அ.)
kottuk kaṭampai — Butter milk leaf plant, shrub; *Grewia paniculata.*

கொத்துக்கம்பு — கம்புவகை (த.பே.அ.)
kottukkampu — A variety of bulrush millet.

கொத்துப் புங்கன் கொத்துக்கொத்தாய்க் காய்காய்க்கும் புன்கு (சா.அ.)
kottuppuṅkaṉ Indian beech yielding fruits in clusters.

கொத்துப்புடல் புடல்வகை (த.பே.அ.)
kottupputal A kind of snake-gourd.

கொந்தாளம் நஞ்சை நீக்கும் ஒரு மருந்துச்செடி (சா. அ.)
kontāḷam A medicinal plant used as an antidote for poison.

கொம்பன் சம்பா ஆனி, புரட்டாசி மாதங்களில் விதைக்கப் பெற்று ஐந்து மாதங்களில் விளையும் சம்பா நெல்வகை (த. பே. அ.)
kompaṉ campā A kind of *campā* paddy sown between āṉ*i* and *puraṭṭāci* maturing in five months.

கொம்புக்கள்ளி கள்ளிவகை (த. பே. அ.)
kompukkaḷḷi A kind of spurge.

கம்புகள்ளி (சா. அ.), கள்ளிக்கொம்பு (சா. அ.), திருகுகள்ளி (சா .அ.).

கொம்புப்புடல்[1] கொடிவகை (த. பே. அ.)
kompupputal A climber; *Trichosanthes nervifolia.*

கான்மா (சா. அ.), கான்மாக்கொடி (சி.வை.அ.), குட்டைப்புடல் (த.பே.அ.), குள்ளப்புடல்(சா.அ.).

கொம்புப்புடல்[2] கொடிவகை (த. பே. அ.)
kompupputal Palwal snake-gourd, climber; *Trichosanthes dioica.*

அமிர்தபலை (சா. அ.), கர்க்கசதலம் (சா. அ.), காசமர்த்தகம் (சா. அ.), குட்டகந்தம் (சா. அ.), கொம்புப்புடலை (I.M.P.), கோசாதகம் (சா.அ.).

கொம்புமிளகு மிளகு வகை (சா. அ.)
kompumiḷaku A kind of pepper.

கொம்மட்டி[1] கொடிவகை (த. பே. அ.)
kommaṭṭi Country cucumber. climber; *Cucumis trigonus.*

கொம்மட்டிக்காய் (சா. அ.), தும்மட்டி (த. பே. அ.). தும்மட்டிக்கொடி (சி. வை. அ.), தும்முட்டி (சா. அ.), மகாமெலம் (சங். அக.).

கொம்மட்டி[3] kommaṭṭi — கொடிவகை (த.பே.அ.) Small water-melon, climber ; *Citrullus.*

கும்மட்டி (பதார்த்த.700), கோதா (சா.அ.), மதுர வள்ளி (த. பே. அ.), வத்தாலைக்கொடி (யாழ். அக.), வத்தேக்கு (சங்.அக.), வராக்கு (சங்.அக.).

கொம்மட்டிக் கீரை kommaṭṭik kīrai — கீரைவகை (த. பே. அ.) Cock's comb green; *Amaranthus atropurpureus.*

இரத்தசாகத்துண்டு (சி. வை. அ.), இரத்த சாகம் (மலை.), செங்கீரை (தைலவ. தைல.135), வாகம் (மலை.), வாகவி (சா. அ.), வாகவிக்கீரை (சி. வை. அ.).

கொம்மட்டிச் சுரை kommaṭṭic curai — கறிக்குதவும் சுரைவகை (த. பே. அ.) A kind of bottle-gourd used for curry.

கொம்மட்டி மாதுளை kommaṭṭi mātuḷai — மரவகை (த. பே. அ.) Citron, tree ; *Citrus medica proper.*

உருசகம் (சா. அ.), குமிட்டி மாதுளை (சா. அ.), கேசரவரம் (சா. அ.), கேசரி (சங். அக.), கொடி மாதுளை (சா. அ.), கொம்மட்டி மரம் (சி. வை. அ.), கோகிலபட்சம் (சா.அ.), கோகிலாட்சம் (சா. அ.), கோகிலாட்சமரம் (சி.வை.அ.), சத்திஅரோசிகநாசனி (சா.அ.), சத்திநாசனி (சா.அ.), சீதளி (சா. அ.), சீதளை (மலை.), துச்சம் (மலை.), துசகம் (மூ. அ.), நுசகமாதளை (சி. வை. அ.), நுசகமாதுளை (சா.அ.), நற்கொம்மட்டி (சா.அ.), பரப்புரோத்தம் (சா. அ.), பாப்புரி (சா. அ), பாப்புரிமாதுளை (சி. வை. அ.), பீசபூரணம் (சா. அ.), பீதபூகம் (சா. அ.), பீதபூகமாதுளைச்செடி (சி. வை. அ.), பீதபூரம் (மலை.), பீதமுகம் (சங். அக.), மகாபலம் (சா. அ.), மஞ்சம் (சங். அக.), மதுப்பரணி (சா. அ.), மருச்சகம் (சா. அ.),

மாதுங்கக்கொடி (சி. வை. அ.), மாதுங்கம் (சா. அ.), மாதுலங்கம் (யாழ். அக.), மாதுளங்கம் (த. பே.அ.), மாதுளுங்கம் (த. பே. அ.). (35)

**கொம்மை** புரட்டாசியில் விதைத்து மார்கழியில் அறுவடை செய்யப்பெறும் கம்புவகை (த. பே. அ.)
**kommai** A variety of bulrush millet sown in *puraṭṭāci* and harvested in *mārkaḻi*.

**கொய்யா** பழமரவகை (பதார்த்த.744)
**koyyā** Guava, tree ; *Psidium guajava*.

அமிர்தபலா (சா. அ.), உய்யக்கொண்டான் (மூ. அ.), உய்யகொண்டான் (சா. அ.), களற்காசிகம் (சா. அ.), களற்காசிகமரம் (சி. வை. அ.), களிப் பாசிதம் (சா. அ.), களிப்பாசிதமரம் (சி.வை.அ.), கொய்யல் (பெருங். உஞ்சைக்.51,51), தவிடாதிகம் (சா. அ.), தவிடாதிகமரம் (சி. வை. அ.), ஜரம் (சா.அ.). (11)

**கொய்யாக்கம்** யுனானி மருந்து தயாரிப்பில் பயன்படும் ஒருவகை மரம் (சா. அ.)
**koyyākkam** A tree useful in preparing unani medicine.

**கொய்னா** பெருமரவகை (த. பே. அ.)
**koyṉā** New grenade bark, large tree ; *Cinchona succirubra*.

கழுமாகிதம் (சி. வை. அ.), குனவனாச்செடி (சி. வை. அ.), சிங்கொனா ( சா. அ. ), சிங்கோனா (த. பே. அ.).

**கொல்லங் கோவைமூலம்** கொல்லன்கோவைக் கொடியின் கிழங்கு (சா. அ.)
**kollaṅ kōvaimūlam** Root of *Corallocarpus epigaeus*, (*kollaṅkōvai*).

ஆகாசகருடன் கிழங்கு (சா. அ.), கிம்மியக்கிழங்கு ( சி. வை. அ. ), கிளிமூக்குக்கிழங்கு ( சா. அ. ), கோவைக்கிழங்கு (சா.அ.), நாகாசனன் (சா.அ.).

**கொல்லம்பாகல்** கொடிவகை (த.பே.அ.)
**kollampākal** A creeper; *Ctenolepis garcinii*.

கொல்லன்பாகல் ( சா. அ. ), கொல்லாம்பாகல் (மூ.வை.அ.), வேலிப்பாகல் (த.பே.அ.).

கொல்லமிளகு   மிளகாய்வகை (த.பே.அ.)
kollamiḷaku   A kind of chilly
*Capsicum frutescens.*

கொல்லன் குதம்பை   செடிவகை (சா.அ.)
kollaṉ kutampai   A plant.

கொல்லன் குதம்பைச்செடி (சி.வை.அ.)

கொல்லன் கோவை   கொடிவகை (பதார்த்த. 422)
kollaṉkōvai   A climber; *Corallocarpus epigaeus.*

அந்தரவல்லி (மலை.), அந்தரவல்லிக்கொடி (சி. வை.அ.), ஆகாசக்கருடன் (த.பே.அ.), ஆகாசக் கருடன்கொடி (சி. வை. அ.), ஆகாசக்கொடி (சா. அ.), ஆகாசகருடன் (மலை.), ஆகாசகெருடன் (கு. பா.), ஆகாயகருடன் (சா. அ.), ஆதாரக்கோவை (சா. அ.), ஆர்க்கங்கோடன் (மு. அ.), ஆர்க்கம் (ஜ.௰), கருடன் (த.பே.அ.), கல்கோவை (சா.அ.), கற்கோவை (மலை.), கிம்மியம் (சா.அ.), கொருடக் கொடி (சி. வை. அ.), கொருடன் (சா.அ.), கொல்லங்கொவ்வை (பதார்த்த. 346), கொல்லன் கொடி (சி. வை. அ.), கொல்லைக்கோவை (சா. அ.), சவுத்திரக்குடோரி (சா.அ.), சாகமூலி (சா. அ.), சாடித்தவக் கொடி (சி.வை.அ.), சாடித்தவம் (சா. அ.), சீவகமிருதி (சா. அ.), சூதபந்தனி (சா. அ.), தணவையாதம் (சா.அ.), பத்திராதி (சா. அ.), பாங்கயம் (சா.அ.), புதையிரல் (சா.அ.), பேய்ச்சீந்தில் (சங்.அக.), மனோமாசி (சா.அ.), யாறகம் (சா.அ.), வனமைத்தாங்கி (சா.அ.), வாருக்கதிர்ரான் (சா.அ.), வெந்தோன்றி (மு.அ.) **(36)**

கொல்லைப் பல்லி   பூடுவகை (த.பே.அ.)
kollaippalli   Lizard plant, herb;
*Striga asiatica.*

காஞ்சிகப்பூடு (சி.வை.அ.), காஞ்சிகம் (சா.அ.), கிருமிமூலம் (சி. வை. அ.), குடியோட்டிப்பூண்டு (சா.அ.), கெவரிகம் (சா.அ.), கெவலிகப்பூடு ((சி. வை.அ.), கொல்லன்கூதகப்பூண்டு (சி.வை.அ.), கொல்லன்கூதகம் (சா.அ.), சிரகசிதப்பூடு (சி.வை. அ.), சிரகசிதம் (சா. அ.), சுல்லு (சா. அ.), சூதபற்பினி (சா.அ.), நின்றிடம் தீஞ்சான் (சா. அ.), பயிரெரித்தபாவி (சா.அ.), பயிரெரிப்பவள் (சா.அ.), பல்லிப்பூடு (த.பே.அ.), பல்லிப்பூண்டு (சா.அ.), விஷந்தீய்ஞ்சான் (சா.அ.). **(18)**

கொழுக் கட்டைப்புல் கோயமுத்தூர் மாவட்டத்திலுள்ளதும் கால்நடைகள் மேய்வதற்கு உரியதுமாகிய புல்வகை (த.பே.அ.)
koluk kattaippul A kind of grass in Coimbatore district very fattening for cattle ; *Cenchrus ciliaris.*

கொலுக்கட்டைப்புல் ( F.T.C. ), கொழுக்கட்டை (W.I.).

கொழுக்கட்டை மந்தாரை மந்தாரை வகை (சா.அ.)
kolukkattai mantārai A kind of ebony, *Bauhinia* genus.

கொழும்புக் கோப்பி இலங்கையில் விளையும் காப்பி (சா.அ.)
kolumpuk kōppi Ceylon coffee.

கொழும்புக்கொட்டை (சா.அ.)

கொழும்பு கொட்டைக் களா இலங்கைமரவகை (சா.அ.)
kolumpu kottaikkalā Ceylon plum, small tree; *Flacourtia ramontchi.*

கட்டாமிமரம் (F. T. C.), காட்டுக்கலா (F.T.C.), கொழும்புப்பழம் ( சா. அ. ), சொத்தைக்களா (சா. அ.).

கொழும்புச் சேவகன் இலங்கையில் விளையும் சிற்றாமுட்டிச்செடி (சா.அ.)
kolumpuc cēvakan Ceylon sticky mallow.

கொழும்புத் தேங்காய் இலங்கையில் விளையும் தேங்காய் (சா. அ.)
kolumput tēṅkāy Ceylon coconut.

கொழும்புவேர் கொடிவகை (த. பே. அ.)
kolumpuvēr Colombo-root, climber ; *Jateorhiza palmata.*

கலம்பா (சா. அ.), சீனவேர் (சா. அ.), சோப்சீனி (சா. அ.).

கொள் பயற்றுக்கொடி வகை (பிங்.)
kol Horse-gram, climber;
*Macrotyloma uniflorum.*

அக்கமினி (சா. அ.), அங்குசபிகாரி (பச். மூ.) அங்குசபிசாரி (த.பே.அ.), அங்குசவி (த.பே.அ.), அம்புப்பிரசிகச்செடி (சி. வை. அ.), அம்புப்பிரசிகம் (சா.அ.), அமலைக்கண்ணி (பச். மூ.), உருவுள்ளு (சா.அ.), கச்சகச்செடி (சி.வை.அ.), கச்சகம் (சா. அ.), கச்சகர் (சா. அ.), கச்சர் (ஜ-ூ), கசராகம் (சா. அ.), கவினை (மலை.), கவினைச்செடி (சி. வை.அ.), காணச்செடி (சி.வை.அ.), காணப்பயறு (சி. வை. அ.), காணம் (திவா.), கானப்பயறு (சி. வை. அ.), குலத்தம் (சூடா.), குலந்தம் (சா. அ.), குலுத்தம் (பிங்.), கொள்ளன் (சா. அ.), கொள்ளு (த. பே. அ.), கொள்ளுப்பயற்றின்கொடி (சி. வை. அ.), கொள்ளுப்பூண்டு (சா. அ.), கௌ (மலை.), சக்கரகம் (சா. அ.), சக்கிரிகம் (சா.அ.), சட்டிக்கல்பம் (சா. அ.), சத்துருவாசம் (சா. அ.), சிக்காலின்னம் (சா. அ.), சிறுவிடு (மலை.), சிறு வீட்டுச்செடி (சி. வை. அ.), செங்கொள் (நாலடி. 387), செங்கொள்ளு (சா. அ.), தாமிரபலகம் (சா. அ.), தாமிரபீசம் (த. பே. அ.), தாமிரவிருந்தம் (ஜ-ூ), திரக்கிதாப்பயறு (சி. வை. அ.), தெற்று (சா.அ.), நபிலம் (சா. அ.), பஞ்சிட்டம் (சா.அ.), பறுணி (சா. அ.), பெருவீடுகொள் (சா.அ.), பெரு வீடுகொள்ளு (சி,வை.அ.), பொற்காசிகச்செடி (சி. வை. அ.), பொற்காசிகம் (சா. அ.), பொற்காசு (சா. அ.), வாயுவுடல் (சா. அ.). **(50)**

கொள்ளிக் கட்டைத் தேக்கு மரவகை (த.பே.அ.),
kollikkattait tēkku Wooly-leaved fire brand teak, small tree ; *Premna tomentosa.*

இலஞ்சிமோதகமரம் (சி. வை. அ.), கழற்சேவகம் (சா.அ.), கழற்சேவகமரம் (சி.வை.அ.), கொலக் கட்டைத்தேக்கு (F.T.C.), கொழுக்கட்டைத்தேக்கு (சா. அ.), கொளுக்கட்டைத்தேக்கு (சா. அ.), சும் மோதகம் (சா.அ.), சும்மோதகமரம் (சி.வை.அ.), பீநாறி (த. பே. அ.), புடகநாறி (த. பே. அ.), போடகநாறி (சா. அ.), போதகநாறி (சா. அ.), போதகநாறிமரம் (சி. வை. அ.), மலைத்தேக்கு (F.T.C.), முன்னை (த.பே.அ.), மோதகத்தேக்கு (சா. அ.), மோதகத்தேக்குமரம் (சி. வை. அ.), மோதகம் (சா.அ.), வாலுவி (சா. அ.), வாலுவித் தேக்கு (சி. வை. அ.) **(20)**

கொளுஞ்சி சிறுகுத்துச்செடிவகை (சா. அ.)
koluñci Purple wild indigo, small shrub ;
*Tephrosia purpurea.*

அவுரி (F.T.C.), காட்டுக்கொழுஞ்சி (த.பே.அ.), காவிலை (ஜா), காவிளை (ஜா) கூம்பூரணச்செடி (சி. வை. அ.), கூம்பூரணம் (சா. அ.), கொழிஞ்சி (சா. அ.), கொள்ளிலை (சா. அ.), கொள்ளிலைச் செடி (சி.வை.அ.), கொள்ளுக்காய்வேளை (த.பே. அ.), சரபுங்கு (சா.அ.), சிம்மந்துகச்செடி (சி.வை. அ.), சிம்மந்துகம் (சா. அ.), திலபாவி (சா. அ.), நல்விசச்செடி (சி. வை. அ.), நல்விசம் (சா. அ.). **(16)**

**கொற்றான்** இலையற்ற ஒட்டுண்ணிக்கொடிவகை (த. பே. அ.)
**korrāṉ** Parasitic leafless small climber ; *Cassytha filiformis.*

அந்தரக்கொடி (F.T.C.), அமரவல்லரி (சா. அ.), அமரவல்லி (சா. அ.), அலர்ந்தபூ (மலை.), அறல் (பச். மூ.), அனந்தி (சா. அ.), அனந்திக் கொடி (சி. வை. அ.), அனந்தை (தைலவ. தைல. 125), ஆகாசவல்லி (சா. அ.), இஞ்சி (மூ. அ.), இஞ்சிகாக்கொடி (சி. வை. அ.), இடும்பாகக்கொடி (சி.வை.அ.), இடும்பாகம் (சா. அ.), இந்திரவல்லி (சா. அ.), இரும்பாச்செடி (சா.அ.), உதையவாளிதம் (சா.அ.), எமனாதங்கி (சா.அ.), எருமைக்கொத்தான் (த. பே. அ.), எருமைக்கொற்றான் (த.பே.அ.), கருக்குடையாள் மூலி (சா.அ.), காருளநாங்கி (சா.அ.), குணசாலி (சா. அ.), கொடிக்கொத்தான் (பிங்.), கொடிக் கொற்றான் (சா.அ.), கொத்தான்கொடி (சி.வை. அ.), சங்குடம் (சா.அ.), சலந்திரட்டி (சங்.அக.), சவுட்டுமானஞ்சி (சா. அ.), சானகி (சா. அ.), சுரே (சா.அ.), சுறை (மலை.), தீர்க்கி (சா.அ.), துடக்கறுப்பான் (த. பே. அ.), தும்பி (மலை.), தும்பு (சா. அ.), தும்புக்கொடி (சி. வை. அ.), நத்தை (த.பே.அ.), நந்தை (மலை.), நரந்தை (திவா.), நாழில் (சா.அ.), நிம்தேசன் (சா.அ.), நூழி (சா.அ.), நூழிக்கொடி (சி.வை.அ.), நூழில் (பிங்.), நெழில் (சா.அ.), நெழில்கொடி (மூ.வை. அ.), நொடியாதிப்பூடு (சா.அ.), பசுங்கொத்தான் (சா. அ.), பசுங்கொற்றான் (த. பே. அ.), மதி வல்லி (தைலவ. தைல.), மாந்திரியம் (சங்.அக.) மூலச்சி (சா.அ.), வஞ்சிமாலிக்கொடி (சி. வை. அ.), வஞ்சிமாலிதழி (சா.அ.), வாசகி (சா.அ.), விரணக்கோபினி (சா.அ.), விஷ்ணுபரி (சா.அ.), வீடி (மலை.), வேரில்லாக்கொத்து (F.T.C.). **(59)**

**கொற்றிக் கோரை** கோரைவகை (த.பே.அ.)
**korrikkōrai** A kind of sedge.

கொறுக்காய்ப் புளி — பெருமரவகை (த.பே.அ.)
korukkāyppuḷi — Malabar gamboge, medium tree; *Garcinia cambogia.*

ஈழப்புளி (த. பே. அ.), கட்டிமுதண்டம் (சா.அ.), கட்டிமுதண்டமரம் (சி.வை.அ.), கபவாதமறியான் (சா. அ.), கொடகன் (சா. அ.), கொறுக்கம்புளி (சா. அ.), கொறுக்கா (மலை.), கொறுக்காய் (த. பே. அ.), கோறுக்கைப்புளி (சா. அ.), சக்கிர வீரியம் (சா.அ.), சத்தப்பேதி (சா. அ.), சத்பேதி (சா. அ.), சிகிரி (த. பே. அ.), சீமைக்கொறுக் காப்புளி (சா. அ.), சீமைக்கொறுக்காப்புளி மரம் (சி.வை.அ.), சீமைக்கொறுக்காய்ப்புளி (சா. அ.), தாகத்தைப்போக்கி (சா. அ.), தாகத்தையடக்கி (சா. அ.), நாமலோமலம் (சா. அ.), புனம்புளி (சா. அ.). **(20)**

கொறுக்கை — நாணல் வகை (மலை.)
korukkai — European bamboo reed or Spanish cane; *Arundo donax.*

எருவை (குறிஞ்சிப். 68 உரை), கொறுக்கச்சி (குறிஞ்சிப். 68 உரை), கோரைக்குச்சு (த. பே. அ.), சரம் (பிங்.), சரவணம் (த. பே. அ.), முடம்புல் (F. T. C.) வேழம் (மதுரைக். 257).

கொன்றை — மரவகை
''கொன்றை....ஊழுறு மலரிற் பாழ்பட'' (அகநா. 398)
konrai — Indian laburnum, medium tree; *Cassia fistula.*

அகராது (வை. மூ.), அங்கசூதம் (சி. வை. அ.), அங்கம் (பச்.மூ.), அசராதி (சி.வை.அ.), அசராது (மூ. அ.), அட்டதாதிகம் (சா. அ.), அடம்பு (சங். அக.), அதிபசமி (மலை.), அதிபசமிமரம் (சி.வை. அ.), அதீதம் (சா. அ.), அதீதமரம் (சி.வை.அ.), அப்பை (த. பே. அ.), அபாலங்கம் (சா. அ.), அரிசம்மாரிகம் (சி. வை. அ.), அரிசயம் (மலை.), அரிசயமங்கு (சா.அ.), அரிசலம் (த. பே. அ.), அரியகம் (சா.அ.), அரியசம் (மலை.), அரியசமரம் (சி. வை. அ.), அன்னை (சா. அ.), ஆக்குபதம் (நாமதீப.), ஆக்குவதம் (கு. பா.), ஆக்கொத்துமம் (மலை.), ஆக்கோது (சா.அ.), ஆகேறு (மூ. அ.), ஆதவமரம் (சி.வை.அ.), ஆர் (மூ. அ.), ஆர்க்குதம் (சா.அ.), ஆர்க்குவதம் (பிங்.), ஆர்குவதம் (ஜ®), ஆர்கோதம் (மூ.அ.) ஆரக்குவதம் (பிங்.), ஆரகு வதம் (சா.அ.), ஆரகோதம் (மூ.அ.), ஆரகோரம் (சா.அ.), ஆரேவதம்(தைலவ. தைல. 135.60-61), ஆற்கோதம் (சா. அ.), ஆற்கோரமரம் (சி. வை.

அ.), ஆறகோரம் (சா. அ.), ஆனைவேணி (சா. அ.), ஆனைவேணிமரம் (சா.அ.), இகழி (சா.அ.), இகுளி (சா. அ.), இசவில் (சா. அ.), இதழி (திவா.), இரளி (சா. அ.), இராகவிண்ணாகமரம் (சி. வை. அ.), இராகவிண்ணாடகம் (மலை.) இராசவிருதம் (சா. அ.), இராசவிருட்சம் (சா. அ.), இராட்சவிருட்சம் (ஜ-ு), இராவங்கம் (சா.. அ.), இருளி (சா. அ.), இருளிமரம் (சி.வை.அ.), இளசாட்சசம் (சா. அ.), இறலி (சா. அ.), ஈசன் கொடி (சா. அ.), ஈசன்றார் (த. பே. அ.), ஈசனா ரணி (சா. அ.), ஏழிலை (சா. அ.), ஒ (சா. அ.), கடுக்கை (கல்லா.2), கவனி (சா. அ.), கவுசி (சா. அ.), கவுதி (சா. அ.), காமுகம் (சா. அ.), கியார சம்பர் (சா. அ.), கிரதமாலம் (சா. அ.), கிரதமால மரம் (சி. வை. அ.), கிருதமாலம் (சா. அ.), கிருத மாலமரம் (சி.வை.அ.), கிருதமாலிகை (சா. அ.), கிருதாமலம் (கு. பா.), கீசரம் (சா. அ.), கீசரமரம் (சி.வை.அ.), கீசரன் (சங். அக.), கீசரி (மலை.), கீரி (சா.அ.), குரப்பூலிகக்கொன்னைமரம் (சி.வை. அ.), குரப்பூலிகம் (சா. அ.), கொடைமுடி (சங். அக.), கொண்ணை (சா. அ.), கொத்திகழி (சா. அ.), கொத்திதழி (தைலவ.தைல.135.26), கொதி திகழி (சா.அ.). கொன்னை (சா.அ.), கொன்னைக் காய் (சா. அ.), கொன்னைமரம் (சி. வை. அ.), கோணக்கொன்றை (சா.அ.), சடைமுடி (சா.அ.), சடைமுடிக்கொத்து (சா. அ.), சதுரங்குலம் (சா. அ.), சநிப்பாகம் (சா.அ.), சம்பிகபாகம் (சா.அ.), சம்புராகம் (சா. அ.), சம்புவக்கு (சா. அ.), சம்மி யாகம் (சா. அ.), சம்மியாகமரம் (சி. வை. அ.), சரக்கொன்றை (பதார்த்த. 204), சரக்கொன்னை (சா. அ.), சனிப்பாகம் (சா. அ.), சனிபாகம் (மலை.), சனிபாகமரம் (சி. வை. அ.), சனியாகம் (ஜ-ு), சாதகவன்னி (சா. அ.), சுவர்ணகம் (சா. அ.), சூடரேச்சாதி (சா. அ.), சொண்டாலு (சா. அ.), தலைச்சூடி (சா. அ.), தலைச்சூடிமரம் (சி. வை. அ.), தாச்சுகா (சா. அ.), தாச்சுகாமரம் (சி. வை. அ.), தாமம் (கு.பா.), தாளிமாருடமரம் (சி. வை. அ.), தாளிமாருடம் (சா. அ.), திரக்கியா (சா. அ.), திரகரி (சா. அ.), திரகரிமரம் (சி.வை. அ.), திருக்கொன்றை (சா. அ.), தீர்க்கபலம் (சா. அ.), தீர்க்கமூலி (சா. அ.), துங்கரீமண்டம் (சா. அ.), நடமிடுமீசன் (சா. அ.), நல்லேகவம் (சா. அ.), நல்லேகவமரம் (சி. வை. அ.), நாட்டுக் கொன்றை (சா. அ.), நீள்சடையோன் (மலை.), நீளச்சம் (சா.அ.), பூச்சாற்றில்பாஷாணமயினி (சா. அ.),பெருங்கொன்றை (சா.அ.), பொன்கொன்றை (சா. அ.), மகரசிதம் (சா. அ.), மகரசிதமரம் (சி. வை.அ.), மதலை (தைலவ. தைல.), மதலைமரம் (சி. வை. அ.), மாமலர் (சீவக. 2038), முடிசரம் (சா. அ.), முடியில்தரித்தான் (சா.அ.), மூதண்டம் (சா.அ.), வாக்கம் (சா.அ.), வியாதிக்காதம் (சா. அ.), வியாதிகாதம் (மலை.). **(143)**

கோகஞ்சம்பா கற்பாங்கான நிலங்களில் விளையும் சம்பாநெல் (சா. அ.)
kōkañcampā A *campā* paddy growing in stony lands.

கோகாலியம் பூடுவகை (சா. அ.)
kōkāliyam A herb.

கோகுள் மரவகை
''கோகுளிலையைக் கொண்டு''
(சீடு. 7,2,1)
kōkuḷ A tree.

கோகோ மரவகை (சா. அ.)
kōkō Chocolate tree ;
*Theobroma cacao*

கோக்கோ (சா. அ.)

கோங்கிலவு மரவகை (த. பே. அ.)
kōṅkilavu Yellow flowered silk cotton, medium tree ; *Cochlospermum religiosum.*

அண்டகெவுனம் (சா. அ.), அரணியகற்பாசி (சா. அ.), அன்னுகம் (சா. அ.), ஆச்சுகாசி (சா. அ.), ஆச்சுகாசிமரம் (சி. வை. அ.), ஆடைக்காதி (சி. வை. அ.), இடிசிகா (சா. அ.), இடிசிகா மரம் (சி. வை. அ.), ஓர்திலிங்கு (சா. அ.), ஓர் திலிங்குமரம்(சி.வை.அ.), கண்ணிகாரம் (சா.அ.), கந்திகாரம் (சா. அ.), கரேணு (நாநார்த்த.), கன்னிகார்மரம் (சி.வை.அ.), கன்னிகாரம் (சிலப். 11.110), காட்டிலவு (த.பே.அ.), காட்டுப்பஞ்சு (த.பே.அ.), காட்டுப்பருத்தி (த.பே.அ.), கானகச் சாரி (சா.அ.), கானகசாரிமரம் (சி. வை. அ.), குயா (சா.அ.), குயாகம் (சா.அ.), குயாகமரம் (சி.வை.அ.), கூமரை (சா. அ.), கூமரைமரம் (சி.வை.அ.), கொங்கிலவு (சா.அ.), கோங்கம் (ஐங்குறு. 366), கோங்கில்லம் (சா.அ.), கோங் கிலம் (I.M.P.), கோங்கு (த.பே.அ.), சடைக்

கோங்கு (சா.அ.), சடைக்கோங்குமரம் (சி.வை.அ.), சிகமதாதிகம் (சா. அ.), சிகமதாதிகமரம் (சி.வை.அ.), சிகரப்பாகிதம் (சா. அ.), சிகரப் பாகிதமரம் (சி. வை. அ.), சுடிநார் (சா. அ.), சூடிணர் (மலை.), சூடினர் (சா. அ.), சூதளம் (சா.அ.), சூதனமரம் (சி.வை.அ.), செந்தணக்கு (த.பே.அ.), சோகமாதிதம் (சா.அ.), சோகமாதித மரம் (சி.வை.அ.), சோங்கு (த.பே.அ.), ஞாமல் (திவா.), ஞாமல்மரம் (சி. வை. அ.), தணக்கு (த.பே.அ.), தணக்குப்பருத்தி (சா.அ.), தனுக்கு (F.T.C.), துருமோற்பலம் (சா.அ.), துருவேர்ப்பலம் (சா.அ.), நாலல் (த.பே.அ.), பச்சைக்கிளுவை (த.பே.அ.), பருத்திமரம் (சி.வை.அ.), பலினி (சா.அ.), பாரங்கு (சங்.அக.), பாலினி (சா. அ.), பிணர் (பிங்.), பிணரா (சா.அ.), பிணராமரம் (சி.வை.அ.), பூத்தாளி (த.பே.அ.), பூந்தாது (மலை.), பேய்ப்பருத்தி (சா.அ.), மஞ்சட்கோங்கு (சா.அ.), மஞ்சட்கோங்குமரம் (சி. வை. அ.), மஞ்சட்டணக்கு (த.பே.அ.), மடவை (சா.அ.), மடவைமரம் (சி.வை.அ.), மலைப்பருத்தி (த.பே.அ.), மலைப்பருத்திமரம் (சி.வை.அ.), முள்ளில விகம் (சா.அ.), முள்ளிலவிகமரம் (சி. வை. அ.), வனசரோசனி (சங். அக.), வனசரோசினி (ஜ©), வனப்பருத்தி (த.பே.அ.). **(76)**

**கோங்கு** மரவகை (த. பே. அ.)
**kōṅku** Common caung, medium tree; *Hopea wightiana.*

இலைப்பொங்கு (சா. அ.), ஓர்ப்பலம் (சா. அ.), ஓற்பலம் (மலை.), காங்கு (த.பே.அ.), துருமோற் பலம் (திவா.).

**கோசிகுவா** குத்துச்செடிவகை (சா. அ.)
**kōcikuvā** A shrub; *Premna esculenta.*

அதோமுகம் (சா. அ.)

**கோசிலம்** பயற்றங்கொடிவகை (சா. அ.)
**kōcilam** A twinging herb; *Vigna trilobata.*

**கோசீரசகம்** சந்தனவகை (சா. அ.)
**kōciracakam** A kind of sandal wood.

**கோட்டம்**[1] குத்துச்செடிவகை (த. பே. அ.)
**kōṭṭam** Arabian costum, medium shrub; *Costus speciosus*.

இடபவநாதி (சா. அ.), உபரியாவி (சா. அ.), உபறியாவி (மூ. அ.), உற்பலம் (சா. அ.), ஒலி (சா. அ.), காசமீரம் (சா. அ.), குட்சிம் (சா.அ.), குட்டபம் (சி. வை. அ.), குட்டம் (சா. அ.), குட்டமம் (சா. அ.), குட்டரோகவக்கினி (சா.அ.), குட்டி (சா. அ.), குட்டியிடுக்கி (சா. அ.), குட்டு (சா. அ.), குடவன் (சா. அ.), குடிகம் (சா. அ.), குபம் (சா. அ.), குபேரம் (சா. அ.), குமம் (சா. அ.), குரம்பை (சா. அ.), குரவம் (சா. அ.), குரா (கு. பா.), குருதுபலம் (சா. அ.), குறவம் (சா. அ.), குஷ்டம் (ஜூ), கூகைமஞ்சள் (சா. அ.), கொட்டிலம் (சா. அ.), கோஷ்டம் (த. பே. அ.), சஞ்சமஞ்சம் (சா. அ.). சாதிகோஷ்டம் (சா. அ.), சிகரப்பாடி (சா. அ.), சிகரப்பாடிகம் (சா. அ.), சிரகபாலி (சா. அ.), சிலாதாரத்தினம் (சா. அ.), சீரகபாடி (மலை.), சீரகபாடிகம் (சி. வை. அ.), சீரம் (சா. அ.), செடமாகம் (சா. அ.), தட்டான் (மலை.), தட்டி (மலை.), துட்டை (சா. அ.), தோமபலம் (சா. அ.), பண்பகப்பூ (சா. அ.), பாப்பாயம் (சா. அ.). பாரி (மலை.), பாரிபாவியம் (தைலவ. தைல. 66), பால்கோஷ்டம் (சா. அ.), பாலகம் (மலை.), பிள்ளைக்கோசம் (சா. அ.), புணக்கம் (சா. அ.), பூட்கரம் (சா. அ.), பூழ்க்கரம் (மலை.), பூழுக்கரம் (சா. அ.), பெருங்குரும்பை (சா. அ.), மலைவசம்பு (சா. அ.), மலைவாச பஞ்சம் (சா. அ.), மூக்கிலி (சா. அ.), வயினாருட தயம் (சா. அ.), வாப்பியம் (சா. அ.), வாப்புயம் (சி. வை. அ.). வாமதாணிதம் (சா. அ.), விந்திய வசனி (சா.அ.), விந்தியவாசனி (மலை.), விந்திய வாசி (யாழ். அக.), விந்தியவாசினி (சா. அ.), வியாசிதம் (சா. அ.), வியாதி (மலை.), வியாப் பியம் (மலை.), வியாப்பிரயம் (சா. அ.). விரணாரி (சா. அ.), வெண்கோட்டம் (பெருங். உஞ்சைக். 50.29), வெண்கோஷ்டம் (த.பே.அ.), வெள்ளைக் கோஷ்டம் (சா. அ.). **(73)**

**கோட்டம்**[2] நறுமணப்பூடு வகை (சீவக. 1905)
**kōṭṭam** A fragrant herb; *Saussurea lappa*.

கதாகுவயம் (சா. அ.), குடவபீரிதம் (சா. அ.), கோஷ்டம் (த. பே. அ.).

**கோடகசாலை** படர்பூடுவகை (பதார்த்த. 252)
**kōṭakacālai** A small diffuse herb; *Justica procumbens*.

அம்பலக்கோடம் (சா.அ.), ஆரசாலை (சி.வை.அ.), ஆரம் (மூ.அ.), ஒட்டொட்டி (சா. அ.), கந்தேறு (சா.அ.), கந்தேறுகப்பூண்டு (சி. வை. அ.), கந்தேறுகம் (சா. அ.), கந்தேறுசாலை (சி.வை.அ.), கமலகம் (சா.அ.), குக்குரம் (சா. அ.), குசந்தாதிகச்செடி (சி. வை. அ.), குசந்தாதிகம் (சா.அ.), கூரசாலை (சி. வை. அ.), கூரணம் (சா.அ.), கூரம் (சா.அ.), கூரம்பாகம் (சா.அ.), கெந்தன் (சா. அ.), கெந்தன்சாலை (சி.வை.அ.), கெந்தனம் (மலை.), கேந்தகசாலை (சி.வை.அ.), கேந்தகம் (மலை.), கோடாசரலை (சா. அ.), கோடாசுழி (கு. பா.), கோடாசூரி (கு.பா.), சதைகரண்டிப்பூடு (மூ.அ), சதையொட்டி (சா.அ.), சாலை (சா. அ.), சாலைப்பூண்டு (சி.வை.அ.), சிசுள் (மலை.), சிசுளகசாலை (சி.வை.அ.), சிசுளகம் (சா.அ.), சிதனசாலை (சி.வை.அ.), சிதனம் (மலை.), சீதளகசாலை (சி.வை.அ.), சீதளகம் (சா.அ.), சீதளம் (மலை.), சைலகோடகம் (சா. அ.), சைலகோடசாலை (சி. வை. அ.), சொர்ணப்பூடு (சா. அ.), சொர்ணம் (சா.அ.), சொற்னம் (மூ.வை.அ.), தசையொட்டியிலை (சா. அ.), தௌத்தியசாலை (சி. வை. அ.), நாலிலைப்பைரவி (சா. அ.), நாலிலைப்பைரவிக்கொடி (சி.வை.அ.), நிரைபூத்தி (த.பே.அ.), நிறைபூத்தி (த. பே. அ.), மாரம் (மலை.), மாராயம் (சா. அ.), முடிமேலழகி (மலை.), ரணநாயகச்செடி (சி. வை. அ.), ரணநாயகம் (சா.அ.), வித்துப்பின்னம் (சா.அ.). **(53)**

கோடகம் — இலந்தையைப் போன்ற ஒருவகைக் கொடி (சா.அ.)
kōṭakam — A creeping plant resembling jujube.

கோடலி — மரவகை (சா.அ.)
kōṭali — Potato plum of Mysore, tree; *Scolopia crenata*.

கண்டகாரம் (சா. அ.), கண்டபத்திரம் (சா. அ.), கண்டபாதம் (சா.அ.) கோடாலி மரம் (சா.அ.), சரளமரம் (சா.அ.), செக்கடா (F.T.C).

கோடன்சம்பா — கோடைக்காலத்தில் விதைக்கப் பெற்று ஐந்து மாதங்களில் முதிரும் சம்பா நெல்வகை (த.பே.அ.)
kōṭaṉcampā — A kind of *campā* paddy sown in hot season and maturing in five months.

கோடைச்சம்பா (பதார்த்த. 817)

**கோடாசரி** ஒருவகைக் கோடக சாலை (சா.அ.)
kōṭācari Coromandal gendarussa, herb; *Rungia repens*.

கருரோமன் (சா.அ.), கோடகசாலை (I. M. P.), கோடாருரி (சா.அ.), சயருதனி (சா.அ.).

**கோடாஞ்சி** மரவகை (த.பே.அ.)
kōṭāñci Fragrant cherry nut-meg, tree; *Polyalthia fragrans*.

அரிவிகம் (சா.அ.), அரிவிகமரம் (சி.வை.அ.), உடும்பிலை (சா.அ.), சிகைக்காபிகம் (சா.அ.), சிகைக்காபிகமரம் (சி. வை. அ.), சேலா (த. பே. அ.), நெடுநாரை (த.பே.அ.).

**கோடைக் கண்ணி** நெல்வகை (சா.அ.)
kōṭaikkaṇṇi A kind of paddy.

**கோடைச் சவுக்கு** சிறுமரவகை (த.பே.அ.)
kōṭaiccavukku Tamarisk, small tree; *Tamarix troupii*

அபலம் (சா.அ.), ஆத்தரளி (சா.அ.), ஆத்தலரி (சா.அ.), ஆற்றலரி (த.பே.அ.), ஆற்றுச்சவுக்கு (த.பே.அ.), ஆற்றுமருந்து (சா.அ.), இரத்தகாஞ்சினை (சா.அ.), சிவப்பாற்றுச்சவுக்கு (த.பே.அ.), சிவப்புக் கோடைச் சவுக்கு (த. பே. அ.), சிவப்புச் சிறுசவுக்கு (த. பே. அ.), சிறுசவுக்கு (I. M. P.), நரிவாலலரி (சா. அ.), பேய்வரளி (சா. அ.). பேய் வரளிச்செடி (சி. வை. அ.). **(14)**

**கோடைத் தாணி** பசுமையான மரவகை (சா. அ.)
kōṭaittāṇi Net-veined Indian nettle, evergreen tree; *Aphananthe cuspidata*.

கொடிதணி (F.T.C.), கொடிதனி (F.T.C.).

**கோடைத் தொண்டி** நீண்டமரவகை (சா. அ.)
kōṭaittoṇṭi A tall tree; *Sterculia alata*.

ஆனைத்தொண்டி (I. M. P.), கோடைத்தணி (சா. அ.).

**கோடைப் பூசணி** கோடைக்காலத்தில் காய் காய்க்கும் பூசணி வகை (த. பே. அ.)
kōṭaippūcaṇi A species of pumpkin creeper which bearing fruits in hot season.

குழிப்பரங்கிக்காய் (சி.வை.அ.), குழிப்பறங்கி (சா. அ.), குழிப்பறங்கிக்காய் (பதார்த்த.699), கோடற் பூசணிக்கொடி (சி. வை. அ.), கோடற்பூசினி (சா. அ.), பறங்கிப்பூசிணி (சி.வை.அ.), பறங்கிப்பூசினி (சா. அ.).

கோடை
எலுமிச்சை புதுச்சேரி எலுமிச்சை (சா. அ.)
kōṭaiy
elumiccai Pondichery lemon.

முருக்கு (சா. அ.)

கோணலிலை மரவகை (சா. அ.)
kōṇalilai Triple-nerved mercury, tree ;
*Mallotus repandus*.

கோணல் இலை (சா. அ.)

கோணற்காரன் மரவகை (சா. அ.)
kōṇaṟkāraṉ Mountain snow bale, tree ;
*Viburnum punctatum*.

கோனகரன் (F. T. C.)

கோணா பெரிய மரவகை (சா. அ.)
kōṇā Nilagiri elm, large tree ;
*Celtis tetrandra*.

ஆதா (W. I.). குவியா (F. T. C.), முருங்கன் (F. T. C.).

கோதரணி பூவகை (சா. அ.)
kōtaraṇi A flower.

கோதரபுட்பி பெரிய கொடிவகை (சா. அ.)
kōtaraputpi A large climber ;
*Argyreia argentea*.

கோதுமை தானியப் பயிர்வகை (பதார்த்த.827)
kōtumai Wheat ; *Triticum aestivum*.

அங்குணம் (சா. அ.), அர்க்கம் (சா. அ.), அலரி (மலை.), இரசாலம் (மலை.), கங்கைநிருபம் (சா. அ.), கதிரதகாலி (சா.அ.), கொல்லைமுதிரை (சா. அ.). கோதமாயவா (சா. அ.), கோதி (திவா.), கோதிமம் (சா. அ.), கோதும்பை (த. பே. அ.), கோதுமம் (யாழ்.அக.), கோதூமம் (திருவானைக். நானவி. 25), சுகந்தாபலம் (யாழ். அக.), சேபம்

சித்திரையன்நெல் நெல்வகை (த.பே.அ.)
cittiraiyannel A kind of paddy.

சிமிக்கி தழுவுகுத்துச்செடிவகை (த.பே.அ.).
cimikki Blue passion flower, twining shrub; *Passiflora buonapartea.*

துருவாதினி (சா.அ.), துருவாதினிப்பூச்செடி (சிவை.அ.), நாட்டுச்சிமிக்கி (சா.அ.).

சிமிட்டி கள்ளிவகை (சா.அ.)
cimiṭṭi A spurge.

சிமிட்டிக்கண்ணி செடிவகை (சா.அ.)
cimiṭṭikaṇṇi A plant.

கண்சிமிட்டி (சா.அ.)

சியாமேலம் சியாம் நாட்டு ஏலம் (சா.அ.)
ciyāmēlam Siam cardamom.

சிரஞ்சீவி மரவகை (சா.அ.)
ciraññcīvi A tree.

சிரஸ்தகோப்பு நெல்வகை (த.பே.அ.)
cirastakōppu A kind of paddy.

சிரிஞ்சிப்பூ படரும் நீண்ட கிளைகளை உடைய ஒரு குத்துச்செடி (சா.அ.)
ciriññcippū A shrub with long, spreading branches; *Woodfordia fruticosa.*

சிரீவச்சகம் பூடுவகை (சா.அ.)
cirīvaccakam A herb.

சிருங்கலை செடிவகை (சா.அ.)
ciruṅkalai A plant.

சில்லொடை வேலமரவகை (F.T.C.)
cilloṭai Pea-podded black babul, small tree; *Acacia eburnea.*

உடை (த.பே.அ), உடைவேல்(த.பே.அ.), உண்ணதம் (சா.அ.), உண்ணதமரம் (சி.வை.அ.), வேடதலம் (சா.அ.), வேல் (த.பே.அ.).

சிலந்திமரம் — செருந்திமரவகை (சா.அ.)
cilantimaram — Pear tree, small tree; *Ochna gamblei.*

சலந்தி (சா.அ.), செருந்தி (சா.அ.).

சிலும்பான் — செடிவகை (சா.அ.)
cilumpāṉ — A plant.

தோழிச்சிலும்பான் (சா.அ.), சிறுசிலும்பான் (சி.வை.அ.), நாய்ப்பாக்கு (சா.அ.).

சிலுவைக்கடப்பு — கடப்பநெல்வகை (த.பே.அ.)
ciluvaikkatappu — A kind of paddy.

சிலைப்பாசி — பாறைகளின் மேல் காணப்பெறும், புல்லுருவி இனத்தைச் சேர்ந்த பாசி (சா.அ.)
cilaippāci — Rock moss of cryptogam plant; *Lichen rotundatus.*

சிலையூஞ்சை — மரவகை (சா.அ.)
cilaiyūñcai — White cutch, medium tree; *Acacia polyacantha.*

கொவளைமுள்ளுமரம் (F.T.C.), கொவிள் (த.பே.அ.), சிலை (சா.அ.), சிலையூஞ்சில் (சா.அ.), சேலை (த.பே.அ.).

சிலோத்பவம் — சந்தனவகை (சா.அ.)
cilōtpavam — A kind of sandal wood.

சிவகரந்தை — பூடுவகை (பதார்த்த. 314)
civakarantai — Fever basil or Ceylon basil, erect stout-stemmed herb; *Sphaeranthus amaranthoides.*

அமுதகரந்தை (சா.அ.), கங்காளமூலி (சா.அ.), கங்காளன்மூலி (சி.வை.அ.), காய்வாசியச்செடி (சி.வை.அ.), காய்வாசியம் (சா.அ.), குணத்தி

(சா.அ.), குளத்தி (சா.அ.), கூலத்தாடிகம் (சா. அ.), கொன்றைசூடி (சா.அ.), கொன்றைசூடிச் செடி (சி.வை.அ.), கொழும்புச்சிவகரந்தை (சா. அ.), சித்தகன்னி (சா.அ.), சிவக்கருந்தி (சா.அ.), சிவகாமிகச்செடி (சி.வை.அ.), சிவகாமிகம் (சா. அ.), சிவப்புக்கி (சா.அ.), சிவப்புக்கிச்செடி (சி. வை.அ.), சிவமாகிதச்செடி (சி.வை.அ.), சிவமா திகம் (சா.அ.), சிவறாளநங்கை (சா.அ.), சிவன் முடிவாசிக்கன்னி (சா.அ.), சுரக்கரந்தை (த.பே. அ.), சுரைக்கரந்தை (த.பே.அ.), செயவல்லி (சா. அ.), சேகிலாசிதச்செடி (சி.வை.அ.), சேகிலா சிதம் (சா.அ.), சேவயக்கரந்தை (சி.வை.அ.), சேவயம் (சா.அ.), திருநீலகண்டச்செடி (சி.வை. அ.), திருநீலகண்டன் (சா.அ.), தீவானந்தமன் மூலி (சா.அ.), தேவாங்கோலச்செடி(சி.வை.அ.), தேவாங்கோலம் (சா.அ.), நல்நாரி (சா.அ.), நல நாறி (சங்.அக.), நறுங்கரந்தை (கு.பா.), நாறாக் கரந்தை (சா.அ.), நாறாகரந்தை (சி.வை.அ.), நாறுகரந்தை (சா.அ.), பரிமளமூலி (சா.அ.), பரி மளாதிமூலி (சா.அ.), பரிமளி (சா.அ.), பல்லா தாரினி (சா.அ.), பிராசித்தா (சா.அ.), பேயோ டாடி (சா.அ.), பேயோடாடிச்செடி (சி.வை.அ.), போக்குமுலைச்சி (சா.அ.), மருக்கம் (சா.அ.), முலைச்சி (சா.அ.), மையல்தருமகாமூலி (சா.அ.), யோனிப்பூ (சா.அ.), வத்திரபஞ்சகச்செடி (சி. வை.அ.), வத்திரபஞ்சகம் (சா.அ.), விசுவநாதச் செடி (சி.வை.அ.), விசுவநாதம் (சா.அ.), விடை யூர்தி (சா.அ.), விடையூர்திச்செடி (சி.வை.அ.), வெண்சீடம் (சா.அ.). **(58)**

சிவங்கி
civaṅki

மரவகை (சா.அ.)
A tree.

சிவதை
civatai

பெருங்கொடிவகை (த.பே.அ.)
Indian jalap, stout, long climber; *Merremia turpethum*.

அகராஜம் (சா.அ.), அடிம்பு (மலை.), அடிம் புருகம் (சா.அ.), அதாகச்செடி (சி.வை. அ.), அதாகம்(சா.அ.), அருணை(த.பே.அ.), இரத்தச் சிவதை (சா.அ.), உற்பலவனதை (சா.அ.), காளசூரம் (சா.அ.), குணகண்டி (மலை.), கும்ப சரம் (சா.அ.), கும்பசீனகம் (சா.அ.), கும்பஞ் சான் (மலை.), கும்பம் (மலை.), கும்பமாதி (சா.அ.), கெண்டகாரணி (சா.அ.), கோடரம் (சா.அ.), கோலாபம் (சா.அ.), சந்திரகாளிந்தி (சா.அ.),சரணம்(ஜ.ஒ.),சரளம் (மலை.),சலகாகி (சா.அ.), சலகாகிச்செடி (சி.வை.அ.), சறுவா னுகம் (சா.அ.), சறுவானுபூதி (சா.அ.), சாய

மரம் (சா.அ.), சாலப்செடி (சா.அ.), சாலப்பு (சா.அ.), சாலம் (சா.அ.), சியாமாத்திரி(சா.அ.), சிவேதை (த.பே.அ.), செணப்பால் (சா.அ.), தந்தி (சா.அ.), தாழி (த.பே.அ.), தாளி (சா.அ.), தாளினி (த.பே.அ.), திரிபுடம் (சா. அ.), திரிவிடம் (சா.அ.), திரிவிருத்தி (சா.அ.), திரிவிருதம் (சா.அ.), திரிவிருதா (சா.அ.), திரு விளம்(த.பே.அ.), நாட்டுச்சிவேதை (சா.அ.), நாசகேரளம் (சா.அ.), நிகும்பம் (சா.அ.), நுகை (சங்.அக.), பகன்றை (சா.அ.), பகடை (சா.அ.), பகண்டை (சா.அ.), பாகண்டை (சா.அ.), பித லாபம் (சா.அ.), பீலிக்கினி (சா.அ.), மதுரா (சா.அ.), வயிரோசனாதி (சா.அ.), வயிரோசனி (சங்.அக.), வரணாசிரா (சா.அ.), விரோசனி (சா.அ.). (57)

சிவந்தஇலைக்கள்ளி — இலைக்கள்ளிவகை (சா.அ.)
civanta ilaikkaḷḷi — A red variety of leaf spurge.

சிவந்தகஞ்சா — ஒருவகைக்கஞ்சா (சா.அ.)
civantakañcā — A red variety of Indian hemp.

சிவந்திக்கடுக்காய் — கடுக்காய்வகை (த.பே.அ.)
civantikkaṭukkāy — A kind of chebulic myrobalan.

சிவந்தி (பதார்த்த. 963)

சிவநீலி — நரையைப்போக்கும் ஒருவகைச் செடி. (சா.அ.)
civanīli — A plant capable of turning grey hair into black.

சிவநீலி (மூ.வை.அ.)

சிவப்பகத்தி — அகத்திவகை (சா.அ.)
civappakatti — Red-flowered West Indian pea tree; *Sesbania grandiflora (coccinea).*

அசோடகத்தி (சா.அ.), அரசாமியம்(சி.வை.அ.), அழகியாள் (சா.அ.), அழகுசிவப்பி (சா.அ.), உதும்பரம் (மூ.அ.), குங்குமப்பேரிகமரம் (சி.வை. அ.), குணவி (சா.அ.), சந்திரன்தங்கச்சி (சா.அ), சிவப்பி (சா.அ.), செங்குதாமரம் (சி.வை.அ.),

செவ்வகத்தி (பதார்த்த.), செவ்வகத்திமரம் (சி.வை.அ.), துருசு (சா.அ.), துவாதசிபத்திரி (சா.அ.), துவாதேசிபத்திரி (சா.அ.), பண்டுகம் (மலை), பண்டுகமரம் (சி.வை.அ.), பவள அகத்தி (சா.அ.), பவளவகத்தி (சா.அ), பவளவகத்தி மரம் (சி.வை.அ.), பழுப்புச்சாற்றுச்சத்துக்காதி (சா.அ.), பிண்டபுட்பம் (சா.அ.), முனிபத்திரி (சா.அ.), விண்பகவகத்தி (சி.வை.அ.), விண்பகம் (சா.அ.). **(25)**

சிவப்பம்மான் பச்சரிசி
civappammāṉ paccarici

அம்மான் பச்சரிசி வகை (யாழ்.அக.)
Red variety of raw-rice plant; *Euphorbia roesa.*

அச்சபாணிதச்செடி (சி.வை.அ.), அச்சபாணிதம் (சா.அ.), அலப்புகா (சா.அ.), உதரப்பாலாடை (சி.வை.அ.), சித்திரப்பாலாடை (சா.அ), சிற்றம் மான்பச்சரிசி (த.பே.அ.), சின்னசிவப்பம்மான் பச்சரிசி (சி.வை.அ.), செவ்வம்மான்பச்சரிசி (மூ.அ.), செவப்பம்மான்பச்சரிசி (மூ.வை.அ.), திப்பியவனிதச்செடி (சி.வை.அ.), திப்பியவனிதம் (சா.அ.), நத்தமாதிகச்செடி (சி.வை.அ.), நத்த மாதிகம் (சா.அ.). **(13)**

சிவப்பரைக்கீரை
civapparaikkīrai

கீரைவகை (சா.அ.)
Red garden greens.

அஞ்சுகக்கீரை (சி.வை.அ.), அஞ்சுகம் (சா.அ.).

சிவப்பவரை
civappavarai

சிவப்புப்பூ பூக்கும் அவரை (த.பே.அ.)
Country bean bearing red flowers.

இடும்பேரகச்செடி (சி.வை.அ.), இடும்போகம் (சா.அ.), சிகப்பவரை (சா.அ.), சேலிரு (சா.அ.), சேலிருவவரை (சி.வை.அ.).

சிவப்பாமணக்கு
civappāmaṇakku

ஆமணக்குவகை (த.பே.அ.)
A kind of castor plant; *Ricinus communis-fructibus majoribus.*

அமிர்தம் (சா.அ.), அரத்திச்செடி (சி.வை.அ.), அரத்திதம் (சா.அ.), ஆதி (சா.அ.), இரத்த வேரண்டம் (சா.அ.), இரேணுகாமூலி (சா.அ.),

இலிங்கபெந்தகத்தி (சா.அ.), இறையாமணக்கு (சா.அ.), உருத்திரபத்திரம் (சா.அ.), எக்கலா தேவி (சா.அ.), கணைப்பூடு (சா.அ.), கரபர்ணம் (ஜ.ஒ.), சிவப்பாதளை (சா.அ.), சிவப்பாதளைச் செடி (சி.வை.அ.), சிவப்பி (சா.அ.), சிறுநவிகச் செடி (சி.வை.அ.), சூரியகாந்தவாமணக்கு (த. பே.அ.), சூரியகாந்தாமணக்கு (ஜ.ஒ.), சூலாத விருத்தி (சா.அ.), செந்துலாமணக்கு (சா.அ.), செந்துலாமணக்குச்செடி (சி.வை.அ.), செம்பை மாலினிச்செடி (சி.வை.அ.), செம்மணக்காதி (சா.அ.), செம்மணக்காதிச்செடி (சி.வை.அ.), செவ்வாமணக்கு (பதார்த்த. 531), செவ்வாலி (சா.அ.), திமிதகூதலச்செடி (சி.வை.அ.), திமித கூதளம் (சா.அ.), திருவாலமூலி (சா.அ.), திரு வாலிப்பூடு (சா.அ.), நாககர்ணம் (மூ.அ.), பற் படிகச்செடி (சி.வை.அ.), பற்படிகம் (சா.அ.), பறங்கியாதளை (சா.அ.), மகாபத்திரி (சா.அ.), மதுவண்டப்பூடு (சா.அ.), யாதுடையான்பூடு (சா.அ.), வாசாணிமூலி (சா.அ.), வாலைப்பெண் (சா.அ.). **(39)**

சிவப்புக்கசகசா — கசகசாவகை (சா.அ.)
civappukkacakacā — Red poppy, herb; *Papaver rhoeas.*

சிவந்தபோஸ்தக்காய் (கு.பா.), சிவப்புக் கசகசா செடி (சா.அ.), சிவப்புப் போஸ்தக்காய்ச்செடி (சா.அ.).

சிவப்புக்காசரளி — அரளி இனச்செடி வகை(சா.அ.)
civappukkācaraḷi — A kind of oleander, shrub.

அச்சுவாதீதச்செடி (சி.வை.அ.), அச்சுவாதீதம் (சா.அ.), சிவப்புக்காசிகாவரளி (சி.வை.அ.), சிவப்புச்சிங்கிரா (சா.அ.), சிவப்புச்சிங்கிராச் செடி (சி.வை.அ.), செவ்வாச்சிகச்செடி (சி.வை. அ.), செவ்வாச்சிகம் (சா.அ.).

சிவப்புக்காசரைக் கீரை — புளிச்சைக்கீரைவகை (சா.அ.)
civappukkācaraik kīrai — Red variety of Indian brown hemp.

சிவப்புக்கீழா நெல்லி — கீழாநெல்லி இனத்தைச் சேர்ந்த பூடு (சா.அ.)
civappukkīḻānelli — A herb: *Phyllanthus urinaria.*

அணிச்சுராவிதம் (சா.அ.), சிகப்புக்கீழாநெல்லி (சா.அ.), சிவப்புகீழாநெல்லி (கு.பா.), சிவப்பு நெல்லி (கு.பா.), சிறுகீழாநெல்லி (கு.பா.), செங் கீழாநெல்லி (கு.பா.).

சிவப்புக்குங்கிலியம் குங்கிலியவகை (மூ.அ.)
civappukkuṅkiliyam Red dammer.

இரத்தபோளம் (சா.அ.), செங்குங்கிலியம் (சா.அ.).

சிவப்புக்குத்தாளை நெல்வகை (த.பே.அ.)
civappukkuttāḷai A kind of paddy.

சிவப்புக்கூத்தன் குதம்பை கூத்தன்குதம்பைவகை (சா.அ.)
civappukkūttaṉ kutampai Red variety of Indian lantana.

குருதிக்கூத்தன் (சா.அ.), குருதிக்கூத்தன்செடி (சி.வை.அ.).

சிவப்புச்சத்தி சாரணை பூடு வகை (சா.அ.)
civappuccatti cāraṇai Red shauranay, herb; *Orygia decumbens*.

சிவப்புச்சாரணை (சா.அ.)

சிவப்புச்சிற்றகத்தி அகத்திவகை (சா.அ.)
civappucciṟṟakatti A variety of common sesban, tree.

அமிர்தசாமரம் (சி.வை.அ), சிவப்புச்சித்தகத்தி மரம் (சி.வை.அ.), சிவப்புப்பரினி (சா.அ.), சிவப் புப்பரினிச்செடி (சி.வை.அ.), செஞ்சிற்றகத்தி (சி.வை.அ.) நலூரியம் (சா.அ.), நலூரியமரம் (சி.வை.அ.).

சிவப்புச் சிறுமணியன் சம்பாநெல்வகை (த.பே.அ.)
civappuc ciṟumaṇiyaṉ A kind of *campā* paddy.

சிவப்புச்சிறு முறியன் — நெல்வகை (த.பே.அ.)
civappucciṟu muṟiyaṉ — A kind of paddy.

சிவப்புச்சீமைப் பிச்சி — சீனமல்லிகை வகை (சா.அ.)
civappuccimaip picci — Red species of China jasmine.

சீனப்பவளப்பிச்சி (சி.வை.அ), சீனப்பவளம் (சா.அ.).

சிவப்புச் செவ்வந்தி — செவ்வந்திவகை (சா.அ.)
civappuccevvanti — Red chrysanthemum..

குங்குமக்கேசரம் (சா.அ.), குங்குமச்செவ்வந்தி (சா.அ.), கெந்தரத்தியாதி (சா.அ.), கேசாரம் (சா.அ.), சிவப்புச்சாமந்தி (த.பே.அ.), சீதாகரணி (சா.அ.), சீதாகரணிச்செடி (சி.வை.அ.), சோகாரம் (சா.அ.), தருணீர் (சா.அ.), தீபனிலகு (சா.அ.), மகாகுமரி (சா.அ.), மதுரி (சா.அ.), வாசனி (சா.அ.). **(13)**

சிவப்புத்தம்பட்டை — தம்பட்டைவகை (த.பே.அ.)
civapputtampaṭṭai — Ovate leaved red or pink flowered sword bean, large climber; *Canavalia gladiata.*

அரணியமுட்கம் (சா.அ.), கயிலகக்கொடி (சி.வை.அ.), கயிலகம் (சா.அ.), காட்டவரை (சா.அ.), காட்டவரைக்கொடி (சி.வை.அ.), பேயவரை (சா.அ.).

சிவப்புத்துத்தி — குத்துச்செடிவகை (த.பே.அ.)
civapputtutti — Devil's cotton, medium shrub: *Abroma angusta.*

சிவப்புத்துவரை — துவரைவகை (த.பே.அ.)
civapputtuvarai — Red gram, long shrub: *Cajanus flavus.*

அயம்மியச்செடி (சி.வை.அ.), அயம்மியம் (சா.அ.), குச்சாகரச்செடி (சி.வை.அ.), குச்சாகரம் (சா.அ.), செந்துவரை (சா.அ.), செந்துவரைமரம் (சி.வை.அ.).

சிவப்புநெரிஞ்சில் நெரிஞ்சி வகை (சா.அ.)
civappuneriñcil A red variety of cow's thorn

சிகப்புநெரிஞ்சில் (சா.அ.)

சிவப்புநெல்லி பூடுவகை (I.M.P.)
civappunelli A herb; *Phyllanthus niruri.*

சிவப்புப்பசளை கீரைவகை (சங்.அக.)
civappuppacaḷai A kind of Indian spinach.

சிவப்பானபசளை (சா.அ.), சிவப்புக்காதி (சா அ.), சிவப்புக்காதிப்பசளைக்கொடி (சி.வை.அ.), சிவப்புக்கொடிப்பசலை (சா.அ.).

சிவப்புப்பூலா பெருங்குத்துச்செடிவகை (த.பே.அ.)
civappuppūlā Coral berry, large shrub: *Breynia vitis-idaea.*

காட்டுநீரூறி (சா.அ.), காட்டுமுருங்கை (சா.அ.), சிகப்புப்பூலா (சா.அ.), சித்துருவம் (F.T.C.), செகப்புப்பூலா (சா.அ.), செப்புலா (F.T.C.), பவளப்பூண்டு (சா.அ.), பவளப்பூல் (சங்.அக.), பவளப்பூலா (த.பே.அ.), பாமாரி (சா.அ.), மணிப்புல்லாந்தி (F.T.C.). (11)

சிவப்புபேராமுட்டி சிவப்பான பேராமுட்டி (சா.அ.)
civappuppērāmuṭṭi Red sticky mallow.

செங்குருந்தொட்டி (சா.அ.), செங்குறுந்தொட்டி (சி.வை.அ.).

சிவப்புப்பொன்னாங்கண்ணி பொன்னாங்கண்ணிவகை (சா.அ.)
civappupponnāṅkaṇṇi A red variety of sessile (ponnāṅkaṇṇi).

அதிமூத்திரநீக்கி (சா.அ.), அதிமூத்திரம்நீக்கிச்செடி (சி.வை.அ.), அன்னகாலிகைச்செடி (சி.வை. அ.), அன்னகாளிகை (சா.அ.), இளந்தோகை (சா.அ.), இளந்தோகைச்செடி (சி.வை.அ.), செங்கொடுப்பை (சா.அ.).

சிவப்புமணித்
தக்காளி
civappumaṇit
takkāḷi

செடிவகை (சா.அ.)
A variety of Indian hound berry.

அதிச்சக்கிரகாளிச்செடி (சி.வை.அ.), உலகமாதா (சா.அ.), காகமாசி (சா.அ.), சிவப்புமணத்தக்காளி (சி.வை.அ.), செங்காஞ்சி(சா.அ.), செம்மணத்தக்காளி (த.பே.அ.), செம்மணித்தக்காளி (த.பே அ), நறுமணத்தக்காளி (சா.அ.), வாயசி (சா.அ.), விடைக்கந்தம் (தைலவ.). (10)

சிவப்புமிளகி
civappumiḷaki

நெல்வகை (சா.அ.)
A kind of paddy.

சிவப்புமிளகு (த.பே.அ.)

சிவப்புரோசா
civappurōcā

ரோசாவகை (சா.அ.)
Summer damascus rose, erect shrub; *Rosa damascena*.

அதிவிடாகிகச்செடி (சி.வை அ.), அதிவிடாகிகம் (சா.அ.), அரக்குரோஜா (சா.அ.), குலாபி (த.பே.அ.), குலாபு (த.பே.அ.), சிவப்புச்சிற்றாமரை (சா.அ.), சிவப்புரோஜா (சி.வை.அ.).

சிவப்புவரிக்
கற்றாழை
civappuvarik
kaṟṟāḻai

வாதநோய்க்கும் காயசித்திக்கும் பயன்படும் ஒரு கற்றாழை (சா.அ.)
Red striped aloe, useful for alcheny and rejuvenation.

செவ்வரிக்கற்றாழை (சா.அ.)

சிவப்புவெட்சி
civappuvetci

வெட்சிவகை (த.பே.அ.)
Pink ixora, long shrub; *Ixora stricta*.

செகப்புவெட்சி (சா.அ.)

சிவப்பொட்டடை
civappottatai

செந்நிறமுடையநெல்வகை (த.பே.அ.)
A red variety of paddy.

சிவலிங்கமரம் — அழகிய நீண்டமரவகை(சா.அ.), காண்க கலிக்கிமரம்.
civaliṅkamaram — African nitta tree, tall handsome tree; *Parkia biglandulosa*.

சாம்பிராணி (த.பே.அ.), சாம்பிராணி மரம் (சி.வை.அ.), தூபவிருட்சம்(சா.அ.), மாவகம்(த.பே.அ.), மாவாகம்(த.பே.அ.),மாவுக்காய்(த.பே.அ).

சிவவல்லபம் — நாவல்வகை (த.பே.அ.)
civavallapam — A species of jaumoon - plum tree.

சிவவல்லி — கோவை வகை (சங்.அக.)
civavalli — A kind of caper.

சிவனாம்பு — பூடுவகை (த.பே.அ.)
civaṉāmpu — A herb.

சிவனார்வேம்பு — சிறுகுத்துச்செடிவகை (பதார்த்த. 267)
civaṉārvēmpu — Wiry indigo, subshrub; *Indigofera aspalathoides*.

இடபவாகனவேம்பு (சா.அ.), இரவநிம்பம் (சா.அ.), இருப்புக்கொல்லி (மலை.), இரும்புலி (சி.வை.அ.), இருவாகநிம்பச்செடி(சி.வை.அ),இருவாகநிம்பம் (சா.அ.), இறைவன் (மூ.அ.), இறைவன்வேம்பு (ஜ௦.), இறைவனிம்பம் (மலை.), ஈசனார்வேம்பு (சா.அ.), உத்திரப்பூண்டு (சா.அ.), கபாலபாணியோன் (சா.அ.), கபாலி (சா.அ.), காந்தாரி (தைலவ.தைல. 135), காலனையுதைத்தோன் (சா.அ.), காலனை வென்றோன்(சா.அ.), கூத்தவாதி(சா.அ.), கூர்மக்கன்னியான் (சா.அ.), கோலன்வைப்பு (சா.அ.), சிரோசனவேம்பு (சி.வை.அ.), சிவநிம்பம் (சா.அ.), சிவன்மூலி (சா.அ.), சிவன்வேம்பு (த.பே.அ.), சிவனார்சேவிகம் (சா.அ.), சுடலைதனில்நிர்த்தன் (சா.அ.), சுடலையாடி (சா.அ.), செந்தணல்மேனி (சா.அ.), செந்தழல்மேனி (சா.அ.), சேவகனார்வேம்பு (சா.அ.) தக்கனைக்கொன்றான் (சா.அ.), தக்கனைக்கொன்றான்மூலி (சி.வை.அ.), தலைநிம்பம் (மலை.), தாய்க்கஞ்சி (சா.அ.), தாய்க்கஞ்சிச்செடி (சி.வை.அ.), திரிசூலி (சா.அ.), திரிநிம்பம் (சா.அ), திரிபுரமெரித்தான் (சா.அ.), திருகை

யத்தான் (சா.அ.), திருசூலை (சா.அ.), திருபுர மெரித்தான் (சா.அ.), திருவஞ்சகன் (சா.அ.), நந்திரகம் (சா.அ.), நந்திரகாவேம்பு(சி.வை.அ.), நெற்றிக்கண்ணன் (சா.அ.), நெற்றிக்கண்ணன் செடி (சி.வை.அ.), பாரிண்டி (சா.அ.), பாரிண்டி வேம்பு (சி.வை.அ.), பொன்னவர்வணங்கும் வேம்பு (சா.அ.), மதலிங்கம் (சா.அ.), மதலிங்க வேம்பு (சி.வை.அ.), மழுவேந்துங்கோபன் (சா. அ.), மால்மைத்துனன் (சா.அ.), முப்புரமாலி (சா.அ.), முப்புரமெரித்தான் (சா.அ.), முப்புர மெரித்தான் பூடு (சி.வை.அ.), மூதிக்கம் (மலை.), மூதிகா (சா.அ.), மூதிகாவேம்புச்செடி (சி.வை. அ.), மூதிசகம் (மூ.அ.), மூலகரணாதி (சா.அ.), ருத்திரம் (சா.அ.), விரணவிஷாக்கினி (சா.அ.). **(62)**

**சிற்றகத்தி**
cirrakatti

அகத்தி வகை (த.பே.அ.)
Common sesban, long shrub; *Sesbania sesban.*

அசளபன்னி (ஜ°.),அசனபன்னி (மலை,), அரக்கு கத்தி (சிவை.அ.), அரக்குவகத்தி (சா.அ.), இயா கதம் (மூ.வை.அ.), இயாகதூதமரம் (சி.வை.அ.), உபராசிதம் (மூ.அ.), உமரித்தாமிரம் (சா.அ.), உமரிதாமரம் (சி.வை.அ.), கடைக்கிழிஞ்சாமூலி (சா.அ.), கருஞ்சித்தகத்திமரம் (சி.வை.அ.), கருஞ்சிற்றகத்தி (சா.அ.), கருஞ்செம்பை (பதார்த்த.533), காய்ந்தெரியான் (சா.அ.), கானகம்(சா.அ.),சகுடை (மலை.), சதரி (சா.அ.), சயந்தி (மலை.), சரளகோடரமரம் (சி.வை.அ.), சரனகோடரம் (சா.அ.), சலயபத்தினி (சா.அ.), சித்தகத்தி (சா.அ.), சிவப்புச்சிற்றகத்தி (சா.அ.), சிறியமரத்தி (மலை.), சிறியமாத்தி (சி.வை.அ.) , சித்துவம் (சா.அ.), சீதளங்காய் (சா.அ.), சீதளம் (சா.அ.), சீந்தூகிமரம் (சி.வை.அ.), சீந்தூசி (சா. அ.), சுமதாகம் (சா.அ.), சூட்சுமமூலம் (சா.அ.); செம்பை (த.பே.அ.), செம்பைமரம் (சி.வை.அ.), செயந்தியாசம் (சா.அ.), செளுத்தகன் (சா.அ.), துரவி (சா.அ.), துருபாரிதமரம் (சி.வை.அ.), நெல்லித்தாளி (சா.அ.), பயாசுமிருதா (சா.அ.), பராசிதா (சா.அ.), பாலகொண்டா (சா.அ.),பீச் சகத்தி (சா.அ.), பீச்சாக்கத்தி (சா.அ.), பீச்சாங் கத்தி (சா.அ.), மறுதண்டமூலி (சா.அ.), விந்தா சம் (சா.அ.). **(47)**

**சிற்றரத்தை[1]**
cirrarattai

அரத்தைவகை (பதார்த்த.985)
Lesser galangal, shrub;
*Alpinia officinarum.*

அஞ்சமிருகல் (பரி.அக.), அயனி (சா.அ.), அயவி (மலை.), அயவிகம் (சி.வை.அ.), அயாலிடம் (ஜ.), அயிலிடம் (மலை.), ஆகுலி (தைலவ. தைல.), ஆனந்தரத்தை (சி.வை.அ.), இரசனா (மலை.), இரசனாசிகம் (சா.அ.), இரத்தை (சா. அ.), இராசுனை (சா.அ.), கடியடு (மலை.), கந் தனை (தைலவ.தைல.), கபடுரத்தி (சா.அ.), கப நாசனி (சா.அ.), கபவிரோதி (தைலவ.), கலிந் தன் (சா.அ.), குட்டிப்பாடித்தி (சா.அ.), குட்டி யிடுக்கி(மலை.), குடைக்காவலன்(சா.அ.),குடைக் கிழங்கு (மலை.), கோடங்கிழங்கு (த.பே.அ.). கோடைக்கிழங்கு (மலை.), சபினகாசிதம் (சா. அ.), சன்றாஷ்டகம் (சா.அ.), சன்னத்தும்பராஷ் டகம் (சா.அ.), சன்னராட்டகம் (சா.அ.), சன்ன ராட்டிரம் (சா.அ.), சன்னராஷ்டகம் (மலை.), சன்னராஷ்டிரம்(த.பே.அ.), சனகப்போசிதம்(சா அ.), சித்தரத்தை (த.பே.அ.), சித்திரமூலி (சா. அ.), சுரசை (தைலவ.தைல.98), சூடனி (சா. அ.), சூடனியரத்தை (சி.வை.அ.), தாய்க்கொல்லி (சா.அ.), தாயைக்கொல்லி (சா.அ.), தாரம் (த. பே.அ.), தித்திரகம் (சா.அ.), தித்திரகவரத்தை (சி.வை.அ.), துவிகாசிகம் (சா.அ.), துவிகாசிக வரத்தை (சி.வை.அ.), நத்தப்பூரிதம் (சா.அ.), நத்தப்பூரிதவேர் (சி.வை.அ.), நிகரோதயம் (சா. அ.), நிட்சைமாதுறுதம் (சா.அ.), நீடுருவாணி (சா.அ.), மிரியாலிகம் (சா.அ.), ராஷ்ணம் (சா. அ.), வசந்தங்கங்கரு (சா.அ.), வரற்கியம் (சா. அ.), வராகி (மலை.), வராகியரத்தை (சா. அ.), விளங்கரத்தை (சி.வை.அ.), விளங்கரம் (சா. அ.), விளங்கு (மலை.). **(58)**

சிற்றரத்தை[2] அரத்தை வகை (த.பே.அ.)
ciṟṟarattai Light galangal, *Alpinia speciosa.*

கடியட்டகம் (சா.அ.), கடியடு (சா.அ.), கடியடுத் தான் (சா.அ.), கோணக்கிணாக்கி (மலை.), கோணாக்கிணாக்கி (சா.அ.), சித்தரத்தை (த. பே.அ.).

சிற்றல்லி அல்லிவகை (சா.அ.)
ciṟṟalli Star water-lily; *Nymphaea cyanea.*

சிற்றவரை அவரைவகை (த.பே.அ.)
ciṟṟavarai Small country-bean.

சித்தவரை (சா.அ.)

சிற்றழிஞ்சில் — அழிஞ்சில் வகை (த.பே.அ.), காண்க கோலி

ciṟṟaḻiñcil — Acute-leaved privet, small tree; *Ligustrum perrottettii.*

சிற்றறுகு — அறுகுவகை (த.பே.அ.)

ciṟṟaṟuku — A kind of bermuda grass.

சின்னறுகு (சா.அ.)

சிற்றாமுட்டி[1] — சிறுகுத்துச்செடிவகை (பதார்த்த. 470)

ciṟṟāmuṭṭi — Rose coloured sticky mallow, sub shrub; *Pavonia zeylanica.*

அணிஞ்சில் (மலை.), அர்க்கபுட்பி (சா.அ.), ஆடி திகைந்தான் (சா.அ.), ஆடுவாள்கண்டாள் (சா.அ.), ஓரிதாமியம் (சா.அ.), கசோதம் (சா.அ.), காத்தொட்டி (சா.அ.), குமரன்மாலிகம் (சா.அ.), குருந்தொட்டி (சா.அ.), குருவிப்பூண்டு (சா.அ.), குறுந்தொட்டி (த.பே.அ.), கொடுகணி (சா.அ.), கொடுகணிச்செடி (சி.வை.அ.), சித்தா முட்டி (த.பே.அ.), சிரேயா (சா.அ.), சிறுகளிக் கரைச்செடி (சி.வை.அ.), சிறுகுறுந்தொட்டி (கு.பா.), சிறுந்தொட்டி (கு.பா.), சீருடன்முத்தி (சா.அ.), சுவாசகம் (சா.அ.), சேவகன் (மலை.), சேவகன்பூடு (த.பே.அ.), சைவபூரி (சா.அ.), திசைமூலம் (சா.அ.), தூதை (சா.அ.), தேங்காய் பூண்டு (F.T.C.), தொட்டி (தைலவ.தைல.94), நாரங்கசீகம் (சா.அ.), நோதளை (சா.அ.), நோதளைச்செடி (சி.வை.அ.), பத்திரபதி (சா.அ.), பலம்பலா (சா.அ.), பலாசாதி (சா.அ.), பலாமடக்கு (சா.அ.), பலாரி (சா.அ.), பலாவு (சா.அ.), பலியரி (சா.அ.), பலிவட்சரம் (சா.அ.), பலை (நாமதீப.326), பலையுறு (சா.அ.), பிராபிக்கி (சா.அ.), பிராபிக்கிச்செடி (சி.வை.அ.), பிராமுட்டி (சா.அ.), பிராய்முட்டி (சா.அ.), பிறாமுட்டி (சா.அ.), பின்மூலம் (சா.அ.), புட்பிரம் (சா.அ.), புராமுட்டி (சா.அ.), புரா முட்டிச்செடி (சி.வை.அ.), மம்மட்டி (சா.அ.), மம்மத்திரி (சா.அ.), மம்மத்திரிச்செடி (சி.வை.அ.), மரிசகச்செடி (சி.வை.அ.), மரிசகம் (சா.அ.), முடியகந்தகச்செடி (சி.வை.அ.), முடியகந்தம் (சா.அ.), முடியங்கம் (சா.அ.), முள்வாமச்செடி (சி.வை.அ.), முள்வாமம் (சா.அ.), மூதண்டத் தாடுவடங்கன் (சா.அ.), வச்சிரா (சா.அ.), விடங்கச்செடி (சி.வை.அ.), விடங்கன் (சா.அ.),

விடமீனம் (சா.அ.), விடமீனமரம் (சி.வை.அ.), வில்லுகன் (சா.அ.), வில்லுமன் (மலை.). (67)

சிற்றாமுட்டி[2] சிறுகுத்துச்செடிவகை (த.பே.அ.)
cirrāmutti Yellow sticky mallow, sub shrub; *Pavonio procumbens.*

சித்தாமுட்டி (த.பே.அ.), சிறுங்குறுந்தோட்டி (இங்.வை. 52).

சிற்றிலுப்பை இலுப்பைவகை (மலை.)
cirriluppai A kind of mahua.

சிற்றிலைப் பொலவு நீண்ட மரவகை (த.பே.அ.)
cirrilaippolavu Rusty-leaved lance wood, long tree; *Pterospermum rubiginosum.*

சிற்றிஞ்சு ஈஞ்சுவகை (சா.அ.)
cirriñcu Dwarf wild date-palm, medium shrub; *Phoenix farinifera.*

அபிற்சிரம் (சா.அ.), அபிற்சிரமரம் (சி.வை.அ.), அரிச்சோனகச்செடி (சி.வை.அ.), அரிச்சோனகம் (சா.அ.), ஈச்சு (சா.அ.), ஈஞ்சு (த.பே.அ.), ஈந்து (த.பே.அ.), கச்சில் (சா.அ.) களங்கு (சா.அ.), காயச்சம் (சா.அ.), கோகம் (நாநார்த்த.), சாகி (த.பே.அ.), சித்தீஞ்சு (சா.அ.), சிற்றீச் சங்குருந்து (சா.அ.), சிற்றீச்சை (சா.அ.), சிற்றீஞ் சுச்செடி (சி.வை.அ.), சிற்றீந்து (பதார்த்த.753), சிரோத்தமம் (சா.அ.), தாட்சி (சா.அ.), திரபருட்சி (சா.அ.), நரியீஞ்சு (சா.அ.), நிலப்பரணி (சா.அ.), நீலமண்டலம் (சா.அ.), பரிமண்டலம் (சா.அ.), பருடகம் (சா.அ.), பருஷகம் (சா.அ.), பாரவாரம் (சா.அ.), பித்தசமனாக்கி (சா.அ), யீஞ்சுச்செடி (சி.வை.அ.). (29)

சிற்றெள் எள்வகை (த.பே.அ.)
cirrel Small kind of sesamum plant.

சிற்றேலம் ஏலவகை (பதார்த்த. 1028)
cirrēlam A kind of cardamom.

சிறியபேயத்தி — அத்திவகை (இங்.வை.)
ciṟiyapĕyatti — Wild fig, small tree;
*Ficus polycarpa.*

சிற்றத்தி (சா.அ.)

சிறியாணங்கை — பூடுவகை (த.பே.அ.)
ciṟiyāṇaṅkai — Small milk wort, herb;
*Polygala glabra.*

அதிகநங்கை (சா.அ.), அதிகநங்கைச்செடி (சி.வை.அ.), அரிசிங்காமூலி(சா.அ.), இரவிநங்கை (சா.அ.), ஊர்வாசுகி (சா.அ.), ஊர்வாசுகிச் செடி (சி.வை.அ.), காலிகயம் (சா.அ.),காலியகச் செடி (சி.வை.அ.), கிரிநங்கை (சா.அ.), கிரிநங் கைச்செடி (சி.வை.அ.), சத்தலோகவேதி (சா. அ.), சத்தலோகவேதிச்செடி (சி.வை.அ.), சிற் றிலைநங்கை(சா.அ.), சிறியாநங்கை (த.பே.அ.), சிறியானங்கை (சி.வை.அ.),சேனைப்படையரவம் (சா.அ.), தங்கைகொல்லிச்செடி (சி.வை.அ.), தங்கையைக்கொதிலி (மூ.வை.அ.), தங்கையைக் கொல்லி (சா.அ.), தனமில்லாக்கன்னி (சா.அ.), தனமில்லாக்கன்னிச்செடி (சி.வை.அ.), தீவரந்த மூலி (சா.அ.), துசக்காரமூலி (சா.அ.), நங்கை (மலை), நரியாணங்கை (சா.அ.), நரியானங்கை (சி.வை.அ.), நின்றாட்சிணுங்கி (சா.அ.), நின் றாற்சிணுங்கி (பதார்த்த. 247), நின்றுசிணுங்கி (மலை.), நெறியாணங்கை (சா.அ.), படமக்கி (சா.அ.), படமடக்கி (சா.அ.), படமடக்கிச்செடி (சி.வை.அ.), படமடக்கு (சா.அ.), மதியாநங்கை (சா.அ.), மருக்களங்கி (சா.அ.), மருக்களங்கிச் செடி (சி.வை.அ.), மருநாதிப்பூடு (சா.அ.), வட்டப்பூடு (சா.அ.), விடங்கொல்லி (சங்.அக.), வழிமூலி (சா.அ.). **(41)**

சிறுகட்டுக்கொடி — கொடிவகை (மலை.)
ciṟukaṭṭukkoṭi — A kind of medicinal creeper;
*Smilax pseudo-china.*

அன்னபூரணக்கொடி (சி.வை.அ.), அன்னபூரணம் (சா.அ.), ஆகரி (சா.அ.), ஆகரிக்கொடி (சி.வை. அ.), இளவந்திகை(சா.அ.), உப்புக்கட்டி (மலை.), உப்புக்கட்டிக்கொடி (சி.வை.அ.),கைச்சிபக்கொடி (சி.வை அ.),கைச்சிபம்(சா.அ.), சிற்றின்பக்கட்டுக் கொடி (சி.வை.அ.), சிற்றின்பம் (சா.அ.), நனைந் தவக்கொடி (சி.வை.அ.), நனைந்தவம் (சா.அ.), பிரமதந்தி (சா.அ.), பிரமதந்திக்கொடி (சி.வை. அ.),பொடிக்கட்டு (சா.அ.),பொடிக்கட்டுக்கொடி (சி.வை.அ.), வெண்கட்டுக்கொடி (சா.அ.). **(18)**

சிறுகடுக்காய் கடுக்காய்வகை (த.பே.அ.)
ciṟukaṭukkāy A kind of chebulic myrobalan.

சிறுகந்தல் சிறுமரவகை (F.T.C.)
ciṟukantal A small tree; *Ceriops decandra.*

சொரப்பின்னை (F.T.C.)

சிறுகளா களாவகை (சங்.அக.)
ciṟukaḷā A spreading evergreen shrub: *Carissa spinarum.*

கரம்பரி (சா.அ.), கரம்பரிச்செடி (சி.வை.அ.), கரம்பை (சா.அ.), களம் (சூடா.), களரிகாமரம் (சி.வை.அ.), களவம் (திவ்.பெரியதி.), களவு (திவா.), களவுணி (சா.அ.), களவுணிமரம் (சி.வை.அ.), களா (புறநா. 177.9), சிறுகளி (த.பே.அ.), சிறுநவ்வுகிச்செடி (சி.வை.அ.), சின்னகளா (சா.அ.), சின்னட்டி (சா.அ.), சின்னட்டிகம்(சா.அ.), சின்னட்டிகாமரம் (சி.வை.அ.), திரக்காரவஞ்சி (சா.அ.), திரக்காரவஞ்சிமரம் (சி.வை.அ.), நரிக்களா (சா.அ.), வட்டக்கிளா (சா.அ.), வட்டக்கிளாச்செடி (சி.வை.அ.). **(21)**

சிறுகற்றாழை கற்றாழை வகை (த.பே.அ.)
ciṟukaṟṟāḻai Small Indian aloe, medium shrub; *Aloe vera littoralis.*

குருவைக்குமரி (சா.அ.)

சிறுகாஞ்சொறி காஞ்சொறி வகை (த.பே.அ.)
ciṟukāñcoṟi Small climbing nettle, medium climber;
*Tragia involucrata-cannabina.*

அகிலமேதகி (சி.வை.அ.), அலைவன் (பச்.மூ.), அனந்தை (நாநார்த்த.), கருஞ்செந்தட்டி (F.T.C.), காஞ்சுருட்டான் (F.T.C.), சஞ்சாரி (சா.அ.), சமுத்திராந்தம் (த.பே.அ.), சிறுபூனைப்பீஷன் செடி (சி.வை.அ.), சுணைச்சி (சா.அ.), துற்பரிசம் (மலை.), பிரசுப்பிரியம் (சா.அ.), பிலி (தைலவ.தைல.103), பூனைக்காச்சி (F.T.C.), பூனைக்காஞ்சி (பச்.மூ.), பூனைக்காஞ்சொறி (மூ.அ.). **(15)**

சிறுகாளான் காளான்வகை (சி.வை.அ.)
ciṟukāḷāṉ Small mushroom.

நரியக்காளான் (சா.அ.), நரியாக்காளான் (சி.வை.அ.).

சிறுகிழங்கு — கொடிவகை (பதார்த்த. 438)
ciṟukiḻaṅku — Goa potato, medium climber; *Dioscorea aculeata.*

காட்டுக்கிழங்கு (சா.அ.), காமனக்கிழங்கு (சி. வை.அ.), காமனை (சா.அ.), கோவாக்கிழங்கு (சா.அ.), கோவைக்கிழங்கு (சா.அ.), கோவை வள்ளி (சா.அ.), சாரக்கிழங்கு (சா.அ.), சிறு மூலகம் (ஜ௰.), சிறுமூலம் (மலை.), சிறுவள்ளி (பதார்த்த. 438), சுரசம் (திவா.), நாகபாலி (சா. அ.), நாகபாலிக்கிழங்கு (சி.வை.அ.), நீர்க்கிழங்கு (சா.அ.), மண்கிழங்கு (த.பே.அ.), மதுவாலு (சா.அ.). **(16)**

சிறுகீரை — கீரைவகை (திவா.)
ciṟukīrai — A kind of greens; small shrub; *Amaranthus campestris.*

ஒக்கனிமாதர் (சா.அ.), கண்டிகை (நீதிசாரம்,83) கழாய் (சங்.அக.), கழாயம் (சங்.அக.), சாகம் (பிங்.), சாகினி (பிங்.), சுருக்கி (த.பே.அ.), வயிரவன் (மலை.).

சிறுகுரும்பை — உயர்ந்த நெல்வகை (த.பே.அ.)
ciṟukurumpai — A superior kind of paddy.

சிறுகுறிஞ்சா — மருந்துக்கொடிவகை (பதார்த்த.120)
ciṟukuṟiñcā — Small Indian ipecacuanha, large woody medicinal climber; *Gymnema sylvestre.*

அத்திக்கோலிகச்செடி (சி.வை.அ.), அத்திக்கோலி கம் (சா.அ.), அமுதச்சேவிதம் (சி.வை.அ.), அமுதசேவிதம் (சா.அ.), அமுதபுட்பம் (மலை.), அமுதபுரம் (பச்.மூ.), அமுதபுஷ்பச்செடி (சி.வை. அ.), அமுதுபுரம் (சா.அ.), அயகம் (மலை.), அனந்தம் (சா.அ.), ஆதவாங்கனி (சா.அ.), ஆதிகம் (மூ.அ.), ஆரியகம்(மூ.அ.), ஆலியகம்(மூ. அ.), உன்மத்தகி (மூ.அ.), உன்மத்தை (ஜ௰.), உன்மந்தகி (சா.அ.), கடுவல்லி (சா.அ.), கண்ணு மின்னயம்கொடி (F.T.C.), களாவிழுதி (சா.அ.), காளி (சா.அ.), கிட்சுசியம் (சா.அ.), குரிந்தை (சா.அ.), குழலிதச்சம் (சா.அ.), கூரியபரணி

40.2-4 ௫

(சா.அ.), கொடிக்குறிஞ்சரா (சா.அ.), கோகிலம் (சா.அ.), கோகிலா(சா.அ.), கோகிலாச்செடி (சி.வை.அ.), கோகுலம் (த.பே.அ.), சக்கான் (சா.அ.), சகசா (மலை.), சசாச்செடி (சி.வை.அ.), சாரகம் (சா.அ.), சாரங்கம் (சா.அ.), சாலகச்செடி (சி.வை.அ.), சாலகம் (மலை.), சிட்சுசீயம் (சா.அ.), சித்திரதம்(சா.அ.), சித்திரம் (சா.அ.), சிறுகுறிஞ்சாச்செடி (சி.வை.அ.), சொர்ணவாதியதிமதுகம் (சா.அ.), திருபரணி (சா.அ.), தெட்சணாவிருட்சி (சா.அ.), நாதயந்தனஞ்சரி (சா.அ.), நோசிதச்செடி(சி.வை.அ.), நோசிதம் (சா.அ.), பசானி (F.T.C.), பருசிரிங்கி (சா.அ.). பனதாந்திரி (சா.அ.), பாதவிருட்சம் (சா.அ.), புள்ளியச்செடி (சி.வை.அ), புள்ளியம் (மலை.), புளியம் (சா.அ.), புற்குறிஞ்சி (சா.அ.), புற்குறிஞ்சிச்செடி(சி.வை.அ.), மச்சிருங்கி (சா.அ.), முத்துப்பரப்பி (சா.அ.), மேஷசிருங்கி (சா.அ.). (59)

சிறுகுறுவை — நெல்வகை (த.பே.அ.)
ciṟukuṟuvai — A kind of paddy.

சிறுகொட்டைக் கரந்தை — கொட்டைக்கரந்தைவகை (த.பே.அ.)
ciṟukoṭṭaik karantai — A kind of chickweed.
*Epaltes divaricata.*

சிறுகொம்மட்டி — கொம்மட்டிவகை (யாழ்.அக.)
ciṟukommaṭṭi — Small cucumber.

தும்மிட்டி (யாழ்.அக.)

சிறுகொய்யா — கொய்யாவகை (த.பே.அ.)
ciṟukoyyā — Dwarf guava, small tree;
*Psidium pumilum.*

சிறுகொன்றை — கொன்றை வகை (பதார்த்த.205)
ciṟukoṉṟai — Small cassia.

சிறுகொன்னை (சி.வை.அ.)

சிறுகோரை — கோரைவகை (த.பே.அ.)
ciṟukōrai — A kind of sedge.

சிறுசண்பகம் நீண்டமரவகை (திவா.)
cirucaṇpakam Cananga flower, tall tree;
*Cananga odorata.*

இரத்திமாணிக்கக்கொடி (சி.வை.அ.), இரத்திமாணிக்கம் (சா.அ.), இராசபுத்திரி (சா.அ.), இருண்டி (சா.அ.), கருமுகை (திவா.), சண்பகம் (சா.அ.), சாதிமனோசா (சா.அ.),சிறுசெண்பகம் (பெருங்.இலாவாண.12.29), சுமணா (சா.அ.), சுவேதகா (சா.அ.), சுவேதிகா(சா.அ.), நேத்திர நிருமாலி (சா.அ.), நேத்திரமாலி (சா.அ.), நேத்திரமாலிமரம் (சி.வை.அ.), பவளவாருதி (சா.அ.), பாமினி (சா.அ.) பிச்சி (மலை.), பித்தி (ஜ.), பித்திகை (பிங்.), பிரியவதா (சா.அ.), மரமனோரஞ்சிதம் (த.பே.அ.), மாலதி(சா.அ.), மாலதிமரம்(சி.வை.அ.), மாலானி(சா.அ.). **(24)**

சிறுசணல் சணல்வகை (த.பே.அ.)
cirucaṇal Common flax or linseed, herb;
*Linum usitatissimum.*

அல்சி (சா.அ.), அலிசி (த.பே.அ.), ஆளி (த.பே.அ.), சந்திரசுரா (சா.அ.).

சிறுசாமை சாமைவகை (சங்.அக.)
cirucāmai A kind of little millet.

சிறுசிட்டாஞ்சி நெல்வகை (த.பே.அ.)
cirucittāñci A kind of paddy.

சிறுசெங்குரலி மலைக் கொடிவகை
''சேடல்செம்மல்சிறுசெங்குரலி'' (குறிஞ்சிப்.82).
cirucenkurali A mountain creeper.

கருநதாமக்கொடி (குறிஞ்சிப். 82,உரை)

சிறுதாளி தாளிக்கொடிவகை (மூ.அ.)
cirutāḷi Hairy leaved creamy-white bind weed, small climber;
*Ipomoea obscura.*

குருத்துத்தாளி (சா.அ.), குறுகுத்தாளி (மலை.), குறுகுதாளி (சா.அ.), குறுந்தாளி (மலை.), குறுவிலட்சுமி (சா.அ.), நற்றாளி (சா.அ.), நுரைப்

பேபினி (சா.அ.), நுரைப்பேபினிக்கொடி (சி.வை. அ.).

சிறுதிப்பலி — திப்பலிவகை (த.பே.அ.)
ciṟutippali — A species of long pepper.

சிறுதுத்தி — சிறு குத்துச் செடிவகை (த.பே.அ.)
ciṟututti — Five-winged capsule rose mallow, subshrub; *Hibiscus vitifolius*.

சிவனாந்தி (சா.அ.), சிவனாந்திச்செடி (சி.வை. அ.), செந்துத்தி (மூ.அ.), பரத்துவாசி (சா.அ.), பாரத்துவாசி (சா.அ.), மணித்துத்தி (த.பே.அ.), மஞ்சள்துத்தி (F.T.C.), வனக்கற்பாசி (சா.அ.), வனகர்ப்பாசம் (சா.அ.), வனகார்ப்பாசம் (சா. அ.). (10)

சிறுதும்பை — தும்பைவகை (த.பே.அ.)
ciṟutumpai — Fascicled minute-leaved white dead-nettle, small shrub; *Leucas rosmarinifolia*.

அங்குசாதிமூலி (சா.அ.), இசருகம் (சா.அ.), சத்திபாசம் (சா.அ.), சன்னத்தும்பை (த.பே. அ.), சிறுநாகலீயச்செடி (சி.வை.அ.), சூலனாதி (சா.அ.), தும்பிச்செடி (சி.வை.அ.), துருநாதி தும்பை (சா.அ.), துருனாதிதும்பை (சா.அ.), நரிமாமிகத்தும்பை (சி.வை.அ.), நரிமாமிசம் (சா. அ.), நரிவிளிகா (சா.அ.), நரிவிளிகாத்தும்பை (சி.வை.அ.), நுரையிலிகச்செடி (சி.வை.அ.), நுரையிலிகம் (சா.அ.), பாசிமாவேலை (சா.அ.), பாசியம் (சா.அ.), பாசியா (சா.அ.), பாசியாச் செடி (சி.வை.அ.), புட்டிலவச்செடி (சி.வை.அ.), புட்டிலவம் (சா.அ.), மடறுங்கி (சா.அ.), மூட்டைக்கொல்லி (சா.அ.), மூட்டைக்கொல்லிச் செடி (சி.வை.அ.), வனராசபூண்டு (சா.அ.). (25)

சிறுதுளசி — துளசிவகை (மூ.அ.)
ciṟutuḷaci — A small species of basil.

குறுந்துழாய் (மலை.), குறுந்துளசி (மலை.).

சிறுதேக்கு[1] — குத்துச்செடிவகை (த.பே.அ.)
ciṟutēkku — Bettle-killer, shrub; *Clerodendrum serratum*.

அங்காரவல்லி (W.I.), கண்டுபரங்கி (சா.அ.), கண்டுபாரங்கி (பதார்த்த.980), கண்டுமூலம் (மலை.), கந்திகை (தைலவ.தைல.66), காசக்கினி (சா.அ.), காட்டுஎருக்கு (F.T.C.), காட்டுத்தேக்கு (சா.அ.), கைத்தேக்கு (சா.அ.), கைத்தேக்குமரம் (சி.வை.அ.), சாகஞ்சம் (சா.அ.), சாசக்கினி (சா.அ.), சாலேயணம் (சா.அ.), சான்மூலிகை (சா.அ.), சிகரித்தேக்கு(சா.அ.),செவியம் (ஜ.ு.), ஞரிவாளை (சா.அ.), திராணிக்கம் (சா.அ.), திராணிக்கமரம் (சி.வை.அ.), நந்தகாரி (மூ.அ.), நிதியவம் (சா.அ.), நிதியவமரம் (சி.வை. அ.), நுவலம் (சா.அ.), நுவலமரம் (சி.வை.அ.), பார்க்கவி (மலை.), பாரங்கி (சங்.அக.), பாரங்கு (சங்.அக.), பிரபாவம் (சா.அ.), புல்லிகம் (சா.அ.), புல்லிகமரம் (சி.வை.அ.), புன்றேக்கு (சா.அ.), மாம்பிரம் (சங். அக.), வாதசுரம்போக்கி (சா.அ.), வாதமடக்கி (மூ.அ.). (34)

**சிறுதேக்கு[2]** குத்துச்செடிவகை (த.பே.அ.)
**cirutēkku** Bushy fire-brand teak small under shrub; *Premna herbacea.*

அங்காரகவல்லி(பச்.மூ.), அங்காரவல்லன்(த.பே.அ.), அங்காரவல்லி (மலை.), சாலேயம்(மலை.), நிலநாவல் (சா.அ.), பூமிசம்பா (I.M.P.), பூமிசம்பு (த.பே.அ.).

**சிறுதேட்கொடுக்கு** தேட்கொடுக்கி வகை (பதார்த்த. 265)
**cirutēṭkoṭukku** A species of turnsole.

அணங்கலிச்செடி (சி.வை.அ.), அநங்கலி(சா.அ.), சிர்காகோழி (சா.அ.).

**சிறுநறளை** கொடிவகை (மூ.அ.)
**cirunaraḷai** Large woolly-lobed vine, medium climber; *Ampelocissus tomentosa.*

சிறுநரளை(சி.வை.அ.), நரளைக்கொடி (சி.வை. அ.), நரிநரளைக்கொடி (சி.வை.அ.), நரிநறளை (சா.அ.).

**சிறுநறுவிலி** சிறுமரவகை (மூ.அ.)
**cirunaruvili** Common sebesten, small tree, *Cordia dichotoma.*

கல்லிருசு (F.T.C.), கல்லீயவம்(சா.அ.), கல்லீயவ மரம் (சி.வை.அ.), கல்விரிசு (சா.அ.), கல்விருசு (சா.அ.), சவரித்தாகிகம் (சா.அ.), சவரித்தாகிக மரம் (சி.வை.அ.), நறுவல்லி (த.பே.அ.), நறுவிலி (த.பே.அ.), நறுளி (த.பே.அ.), வளகு (கலித். 43). (11)

சிறுநன்னாரி — நன்னாரிவகை (த.பே.அ.)
ciṟunaṉṉāri — A species of sarasaparilla, twining shrub; *Hemidesmus indicus-angustifolia*.

கிரிவிளவல்லி (சா.அ.), சசாபம் (மலை.), சரி சயம் (சா.அ.), சரிபாசி (சா.அ.), சரியம் (மலை.), சாரிபம் (சா.அ.), தருணநாரி (சா.அ.), பறைசீவி (மலை.), பறைசீவிச்செடி (சி.வை.அ.).

சிறுநாகப்பூ — மரவகை (பதார்த்த.1011)
ciṟunākappū — Iron-wood of Ceylon, medium tree; *Mesua ferra*.

அகிபுட்பம் (சா.அ.), அமந்தாசிகம் (சி.வை.அ.), அருளி (சா.அ.), ஆடகம் (கு.பா.), இபக்கியம் (சா.அ.), இபகேசரம் (சா.அ.), இரவம் (புறநா. 281.1), இராசயுகம்(மலை.), இரும்பகம்(சா.அ.), இரும்பகமரம் (சி.வை.அ.), இருள் (பெருங். உஞ்சைக். 41-33), இருள்மரம் (த.பே.அ.), இலங்காசிகை (சா.அ.), இலங்கோசிகை (சா.அ.), ஏமம் (கு.பா.), ஐசிலநாகப்பூ (சா.அ.), ஐசிலம் (த.பே.அ.), ஓமகாஞ்சனம் (சா.அ.), கநகம் (கு.பா.), காஞ்சனம் (கு.பா.), கேசரம் (கு.பா.), சங்கு (சா.அ.), சத்தியுடகூறு (சா.அ.), சதை (த.பே.அ.), சமுத்திரார்த்தப்பூ (சி.வை.அ.), சமுத்திரார்த்தம் (சா.அ.), சாம்பேயகம் (கு.பா.), சித்திரகா (சா.அ.), சித்திரகாமரம் (சி.வை.அ.), சிதனகாமப்பூ (சி.வை.அ.), சிதனகாமம் (சா.அ.), சிந்தகப்பூ (சி.வை.அ.), சிந்தகம் (சா.அ.), சிறுகேசரம் (சங்.அக.), சிறுநாகம் (த.பே.அ.), சிறுநாங்கில் (சி.வை.அ.), சுக்கிலகெந்தம் (சா.அ.), சுருளி (த.பே.அ.), சூத்திரசண்பகம் (சா.அ.), தடிநான்கு (சா.அ.), நாககேசப்பூ (சி.வை.அ.), நாககேசம் (சா.அ.) நாககேசரம் (த.பே.அ.), நாகசப்பூ (சா.அ.), நாகசம்பங்கி (த.பே.அ.), நாககூரப்பூ (சி.வை.அ.), நாககூரம் (சா.அ.), நாகசெண்பகம் (த.பே.அ.), நாகப்பூ (த.பே.அ.), நாகபுட்பம் (சா.அ.), நாகம் (கு.பா.), நாகன்சண்பகம் (சா.அ.), நாகாகுயம் (சா.அ.), நாகேசர் (சா.அ.), நாகேசரப்பூ (சி.வை.அ.), நாகேசரம் (சா.அ.), நாகேகூரப்பூ (சா.அ.),

நாகேசுரம் (த.பே.அ.), நாங்கல் (த.பே.அ.), நாங்கில்மரம் (சா.அ.), நாங்கு (சா.அ.), பசுக் கோசுரம் (சங்.அக.), பாலை (த.பே.அ.), பீத கேசரம் (சா.அ.), புட்பி (சா.அ.), பெரி (த.பே. அ.), மத்திகப்பூ (சா.அ.), மதூத்தம் (தைலவ. தைல.), மாம்பாலிருள் (சா.அ.), யூவாப்பூ (சா. அ.), யோகசங்கப்பூ (சா.அ.). **(71)**

சிறுநாவல் சிறுமரவகை (மூ.அ.)
cirunāval Ruddy black plum, small tree; *Eugenia rubicunda.*

அரிசரநவ்வல் (சா.அ.), கோமாப்பு (சா.அ.), சடைநவ்வல்(சா.அ.), சடைநவ்வல்மரம்(சி.வை. அ.), சம்புநாகை(சா.அ.), சம்புநாவல் (சா.அ.), சாதேவம் (மலை.), சித்தசாகவி (சா.அ.), சிவந் திகம் (சா.அ.), சிவந்திகமரம் (சி.வை.அ.), சிறு நவ்வல் (சி.வை.அ.), சிறுநீவிகமரம் (சி.வை.அ.), தக்கோலம் (த.பே.அ.),நரிநவ்வல் (சா.அ.), நரி நாவல் (சா.அ.), நாகை(சா.அ.), பண்ணி (சா. அ.), புல்லவம் (சா.அ.), புல்லவமரம் (சி.வை. அ.). **(19)**

சிறுநெருஞ்சி நெருஞ்சி வகை (யாழ். அக.)
cirunerunci Small kind of cow's thorn, prostrate herb; *Indigofera linnaei.*

அயவிகாரச்செடி(சி.வை.அ.), அயவிகாரம் (சா. அ.), ஆதம்பேதி (மலை.), இருத்திரோ (சா.அ.), காப்பிரி (சா.அ.), காம்பசி (சா.அ.), காம்பசிக் கொடி (சி.வை.அ.), காம்பம் (சா.அ.), சவ்வா துக்குத்தானியம் (சா.அ.), சிகப்புநெரிஞ்சில் (சா.அ.), சிலாபேசி (த.பே.அ,), சிலாபேதி (சா. அ.), சிவப்புநெரிஞ்சில் (சா.அ.), சுவர்ச்சலம் (சா.அ.), செந்தூபிகக்கொடி (சி.வை.அ.), செந்தூபிகம் (சா.அ.), செந்நெரிஞ்சில் (சா.அ.), செந்நெருஞ்சில் (சா.அ.) செப்புநெரிஞ்சி (F.T. C.), செப்புநெருஞ்சி (பதார்த்த.357), செப்பு நெருஞ்சில் (சா.அ.), செம்புநெரிஞ்சில் (சா.அ.), செய்யச்சம் (சா.அ.), சென்னெருஞ்சில்(சா.அ.), பழப்பேசி (சா.அ.), பழம்பேசி (சி.வை.அ.), பாசனபேதி (சா.அ.), பாசனபேதிக்கொடி (சி. வை.அ.), பாசாணபேதி (த.பே.அ.), பாதாள மூலம் (த.பே.அ.), பாபனபேசி (மூ.வை.அ.), பிற்பலிசாபம் (சா.அ.), மூலபத்திரம் (சா.அ.), மேதக்கிடை (சா.அ.), வேள் (சா.அ.). **(35)**

சிறுபகன்றை
ciṟupakaṉṟai

பூடுவகை (மூ.அ.)
A herb; *Hygrophila balsamica.*

சிறுபசளை
ciṟupacaḷai

பசளைக்கீரை வகை (த.பே.அ.)
Large flowered Indian purslane pot herb; *Portulaca quadrifida.*

அந்தரத்தேசரி (கா.அ.), அந்தரத்தேசரிக்கொடி (சி.வை.அ.), இலைப்பசலை (சா.அ.), இலைப் பசளி (மலை.), ஊரம் (சா.அ.), ஓதுங்கணி(சா. அ.), ஓதுங்கணிக்கீரை (சி.வை.அ.), கொடிப் பசலை (சா.அ.), கோழிமுளையான்(யாழ்.அக.), சிறுபசரைக்கீரை (I.M.P.), சிறுபசலை(F.T.C.), சின்னபருப்புக்கீரை (I.M.P.), சொக்கலி (மூ. அ.), சொக்களி (சா.அ.), தரைப்பசலி (சா.அ.), தரைப்பசலை (F.T.C.), நீலிசம்(சா.அ.), பசலிக் கீரை (I.M.P.), பசலைக்கீரை (I.M.P.), பசளை (த.பே.அ.), பசறை (சா.அ.), பசிரி (உபதேசகா. சிவத்துரோகி. 501), பவனாதமாது (சா.அ.), பாய்விரி (சா.அ.),பாய்விரிக்கொடி (சி.வை.அ.), பாவிரி (பிங்.), பிகன் (சா.அ.), பீக்கை (சங். அக.), மண்டோதயக்கரடிமூலி (சா.அ.), மறை மூலி(சா.அ.), முக்குளி (பதார்த்த.607), மூக்கிலி (மலை.), வசலை (கந்தபு. இரணியன்யுத். 56.), வசளை (த.பே.அ.), வயலை (ஐங்குறு. 11), வயளை (யாழ்.அக). (36)

சிறுபாலடை
ciṟupālaṭai

பூடுவகை (யாழ்.அக.)
A prostrate herb;
*Zornia diphylla.*

சிறுபாளைச்சம்பா
ciṟupāḷaiccampā

சம்பாநெல்வகை (த.பே.அ.)
A kind of *campā* paddy.

சிறுபுள்ளடி
ciṟupuḷḷaṭi

குத்துச்செடிவகை (பதார்த்த. 366)
Scabrous ovate unifoliate tick-trefoil, sub shrub;
*Desmodium velutinun.*

அகிலமேதகி (சி.வை.அ.), அங்கசுபாதி (சா.அ.), அங்கிசபாதி (பரி.அக.), அங்கிடபாதி (சா.அ.), அங்கிஷபாதி (யாழ்.அக.), அங்குசபாதி (மலை.), அங்குசவாதி (பச்.மூ.), அண்ணெரிஞ்சான் (மூ, வை.அ.), அம்சபாதயிலை (சா.அ.), அன்றெரிந் தான் (மலை.), அன்றெரிந்தான்பூண்டு (சா.அ.), கடமாரி (கு.பா.), கந்தபலாசி (சா.அ.), கிட்டா மாரி (சா.அ.), கிருதமண்டாது (சா.அ.), கிட

மாரி (மலை.), கீடமாறி (சா.அ.), குச்சத்தின் பாதி (மலை.), குச்சபாதி (சா.அ.), குச்சபாதிச் செடி (சி.வை.அ.), குசத்தின்பாதி (சா.அ.), குபயம் (சா.அ.), குபையம் (மலை.), சிந்தூரி (சா. அ.), சிபமது (சா.அ.), சிம்பட்டை (சா.அ.), சிம் படை (சா.அ.), சிம்பத்தை (மலை.), சிம்பதை (மலை.), சிம்மது (சா.அ.), சிமந்தாரிகச்செடி (சி. வை.அ.), சிமந்தாரிகம் (சா.அ.), சிமந்தூரி (சா. அ.), சிவமது (சா.அ.), சிவமதுகச்செடி (சி.வை. அ.), சிவமதுகம் (சா.அ.), சுமாரி (சா.அ.), திரி பாதி (மலை.), திருடாட்டபதி (சா.அ.), திறி பாதி (ஜ.மூ.), திறிபாதிகச்செடி (சி.வை.அ.), நரிப் புள்ளடி (சா.அ.), நரிப்புள்ளடிச்செடி (சி.வை. அ.), புள்ளு (மூ.அ.), பொரையிலாதினி (சா. அ.), பொறியரை (சங்.அக.), மூவிலைப்புள்ளடி (சா.அ.), வேல்கந்தி (சங்.அக.). **(48)**

சிறுபுன்னை — புன்னைவகை (த.பே.அ.)
cirupunnai — Poonspar of Travancore, medium tree; *Calophyllum apetalum.*

சிறுபின்னை (I.M.P.)

சிறுபூலா — பூடுவகை (த.பே.அ.)
cirupūlā — A herb.

அயம் (மூ.அ.)

சிறுபூளை — பூடுவகை
"அறுகு சிறுபூளை நெல்லொடு தூஉய்" (சிலப்.9.43)
cirupūḷai — Common wayside weed, herb; *Aerva lanata.*

அகவாமணக்கு (மலை.), அந்திபீழை (சா.அ.), அந்திபீழைச்செடி (சி.வை.அ.), உரதம் (சா.அ.), உழிஞை (திவா.), உனினம் (சா.அ.), ஊங்கனி மூலி (சா.அ.), ஊட்டுபரமூலி (சா.அ.), ஊமிகா (சா.அ.), ஊமிகாச்செடி (சி.வை.அ.), ஊமிள் மலை.), ஊயினை (சா.அ.), ஊனின்பூடு (சா. அ.), கண்பீளை (கு.பா.), கண்பூளை (த.பே.அ.), கற்பேதி (சா.அ.), கூலப்பூ (F.T.C.), குரீஇப் பூளை (குறிஞ்சிப். 72), சனுங்குவூகை (சா.அ.), சாலைநிலப்பூ (சா.அ.), சிறுகண்பீளை (கு.பா.), சுண்ணாம்புக்கீரை (த.பே.அ.), சூத்திரசீரிடம் (சா.அ.), சொக்காலி (த.பே.அ.), சொக்காளி (யாழ்.அக.), சொக்காளிச்செடி (சி.வை.அ.), தூங்கு

முதூரம் (சா.அ.), தேவிமூலச்செடி (சி.வை.அ.), தேவிமூலம் (சா.அ.), பாண்டு (மலை.), பாண்டு கச்செடி (சி.வை.அ.), பாண்டுகம் (சா.அ.), பாண்டுமலர் (சா.அ.), பான்று (சா.அ.), பாஷாணபேதி (கு.பா.), பிஞ்சடம் (சா.அ.), பிஞ்சேடம் (சா.அ.), பீளை (சா.அ.), பூலைப்பூ (F.T.C.), பூளிகச்செடி (சி.வை.அ.), பூளிகம் (சா.அ.), பூளை (சா.அ.), மலாசு (மலை.), மலாகச்செடி (சி.வை.அ.), மூக்கிலி (த.பே.அ.). **(45)**

**சிறுபூனைக்காலி** கொடிவகை (பதார்த்த. 577)
cirupūṉaikkāli Stinking passion flower, medium climber; *Passiflora foetida.*

உப்புநாசமாக்கி (சா.அ.), சங்கி (சா.அ.), சிமிக்கிப்பூ (சா.அ.), நகத்தின்சத்துரு (சா.அ.), நரியீராகி (சா.அ.), நரியீராகிச்செடி (சி.வை.அ.), பூனைக்காலி (சங்.அக.), பூனைப்பிடுக்கு (F.T.C.), மொசுக்கட்டான் (F.T.C.).

**சிறுமணி** ஆறு மாதங்களில் விளையும் சம்பா நெல்வகை (த.பே.அ.).
cirumaṇi A kind of *campā* paddy maturing in six months.

சிறுமணியன் (த.பே.அ.)

**சிறுமணிப்பயறு** காராமணிவகை (த.பே.அ.)
cirumaṇippayaṟu A kind of chowlee bean.

**சிறுமலையரியன்** நெல்வகை (த.பே.அ.)
cirumalaiyariyaṉ A kind of paddy.

**சிறுமுள்ளி** முட்செடிவகை (யாழ்.அக.)
cirumuḷḷi A thorny plant

**சிறுமூலகம்** பூடுவகை (அக.நி.)
cirumūlakam A herb.

**சிறுமொளவா** சிறுமரவகை (F.T.C.)
cirumoḷavā A small tree; *Maba neilgherrensis.*

கறுவிளிச்சி (F.T.C.)

சிறுவன் — சிறுபுள்ளடிவகை (மலை.)
ciṟuvaṉ — A kind of tick-trefoil.

சிறுவெள்ளரி — வெள்ளரிவகை (த.பே.அ.)
ciṟuveḷḷari — A kind of cucumber.

சிறுவேர் — ஒருவகை மருந்துவேர் (இங்.வை. 234)
ciṟuvēr — A kind of medicinal root.

சிறைமீட்டான் — நெல்வகை
"கறுத்த நிறவாலன் சிறைமீட்டான் வளர்பூசைப்பாடி வெள்ளை" (நெல்விடு. 186)
ciṟaimīṭṭāṉ — A kind of paddy.

சின்னச்சம்பா — நான்கு மாதங்களில் விளையும் சம்பா நெல்வகை (த.பே.அ.)
ciṉṉaccampā — A kind of *campā* paddy maturing in four months.

சின்னட்டி — நெல்வகை
"சின்னட்டி பொன்னாயன்" (பறாளை.பள்ளு 23)
ciṉṉaṭṭi — A kind of paddy.

சின்னதுவரை — அழகிய பெரியமரவகை (சா.அ.)
ciṉṉatuvarai — Small caved ebony, large ornamental tree; *Diospyros buxifolia*.

சோரக்கறி (சா.அ.), நெய்ப்பயறு (சா.அ.), மாலிகைத்துவரை (சா.அ.), மிளகுதுவரை (சா.அ.).

சின்னப்பிசானம் — நெல்வகை (த.பே.அ.)
ciṉṉappicāṉam — A kind of paddy.

சின்னப்பூக்கொட்டைக்கரந்தை — பூடுவகை (சா.அ.)
ciṉṉappūkkoṭṭaik karantai — Madras absinth, herb; *Grangea maderaspatana*.

தெருளுபம் (சா.அ.), மாசிபத்திரி (த.பே.அ.)

சின்னறு
cinnaru

கொடிவகை (சா.அ.)
A creeper.

சின்னறுச்சிணுங்கி (சி.வை.அ.)

சின்னாரியம்
cinnāriyam

புல்வகை (சா.அ.)
A grass;
*Brachiaria eruciformis.*

சின்னாருகை
cinnārukai

பூடுவகை (சா.அ.)
A herb.

பரியாயமேவசம் (சா.அ.)

சின்னி
cinni

குத்துச்செடிவகை (மூ.அ.)
Birch-leaved acalypha, shrub;
*Acalypha fruticosa.*

ஆத்தாத்தழை (F.T.C.), இதளை (சா.அ.), கச்சி (மூ.அ.), கன்னிக்கிழங்கு(மலை.),காதளிகம் (சா. அ.), காதளிகமரம்(சி.வை.அ.), காந்தளிகம் (சா. அ), காந்தாளி (சா.அ.), காந்தாளிகம் (மலை.), காளம் (சா.அ.), கிட்டி (பதார்த்த.435), கிளிமா சுணச்செடி (சி.வை.அ.), கிளிமாசுணம் (சா.அ.), குபோகசின்னி (சி.வை.அ.), குபோகம் (சா.அ.), குயோகம் (சா.அ.), சிரீ (சா.அ.), சிறுசின்னி (பதார்த்த. 536), சிறுமணிகாச்செடி (சி.வை. அ.), சின்னிச்செடி (சி.வை.அ.), சின்னிமாரீ (சா.அ.), சீத்தாத்தழை (F.T.C.), சோத்தாச் செடி (F.T.C.), நந்தி (த.பே.அ.), நந்திரசின்னி (சா.அ.), நந்திவிருட்சம் (மலை.), நரிச்சின்னி (சா.அ.), நரிச்சின்னிச்செடி (சி.வை.அ.). **(28)**

சின்னிக்கிழங்கு
cinnikkilanku

சின்னிச்செடியின்கிழங்கு (சா.அ.)
Root of birch-leaved acalypha.

கச்சிக்கிழங்கு (சா.அ.), கந்திக்கிழங்கு (சா.அ.), கிட்கிழங்கு (சா.அ.), கிட்டிக்கிழங்கு (சா.அ.), மனோதாரி (சா.அ.), மனோதாரிக்கிழங்கு (சி. வை.அ.).

சின்னிமாமுனி
cinnimāmuni

குத்துச்செடிவகை (சா.அ.)
A kind of cone head, shrub;
*Strobilanthes bolamputtensis.*

சீத்தா | சிறு பழமரவகை (யாழ்.அக.)
citta | Custard apple, small evergreen tree; *Annona squamosa.*

அன்னிலா (சா.அ.), ஆத்தா (சா.அ.), சீத்தா மரம் (சி.வை.அ.), சீதா (சா.அ.), சீந்தமரம் (சா.அ.), சுபகராஜமரம் (சி.வை.அ.), சுபகலவம் (சா.அ.), திரிலோகேயம் (சா.அ.), திரிலோகேய மரம் (சி.வை.அ.), நிலம்புச்சீத்தா (சி.வை.அ.), நிலம்பூ (சா.அ.), லெட்சுமி (சா.அ.), லெட்சுமி மரம் (சி.வை.அ.). **(13)**

சீத்து | மூங்கில்வகை (சா.அ.)
cittu | Bright green bamboo of the western ghats; *Teinostachyum wightii.*

சீதாபோகம் | நெல்வகை "தாசரதி சீதாபோகந் தனையே சிந்தித்தான்" (நெல்விடுதூது 197)
citāpōkam | A kind of paddy.

சீதாரி | நறுமணமுள்ள மரவகை (சா.அ.)
citāri | A fragrant tree.

கேதுரு (சா.அ.)

சீதிகை | பாலைமரவகை (சா.அ.)
citikai | A kind of iron-wood tree; *Mimusops* genus.

சீதுழாய் — துளசிவகை (யாழ்.அக.)
cītuḷāy — A kind of holy basil.

சீதுளாய் (சி.வை.அ.)

சீந்தில் — மலைக்கொடிவகை
"வீழ் என்பது ஆல்...சீந்தில்கட் குரித்து" (நன்.387,மயிலை.)
cintil — Heart leaved moon creeper, woody climber:
*Tinospora cordifolia*.

அக்கினிசிகம் (சா.அ.), அசாசி (த.பே.அ.), அமரை (த.பே.அ.), அமிர்தக்கொடி (சங்.அக.), அமிர்தகொடி (சா.அ.), அமிர்ததலைச்சி (சா. அ.), அமிர்தம் (சா.அ.), அமிர்தவல்லி (சூடா.), அமிர்தா (சா.அ.), அமிர்தாமலகம் (சா.அ.), அமிர்தை (தைலவ.தைல.23), அமிழ்தக்கொடி (சா.அ.), அமுகம் (மூ.வை.அ.), அமுதம்(மலை.), அமுதவல்லி (திவா.), அமுதவி (பச்.மூ.), அமுதை (த.பே.அ.), அமுர்தவல்லி (சா.அ.), அருக்குசளி (சா.அ.), அருகசிக்கொடி (சி.வை.அ.), அருகஞ்சி (மலை.), அருகம் (த.பே.அ.), அருசம் (சா. அ.), அவிசலி (சா.அ.), அனந்தை (நாநார்த்த.), ஆகாசவல்லி (சா.அ.), ஆகாசவல்லிக்கொடி (சி. வை.அ.), ஆகாசி (மூ.அ.),ஆகாயவல்லி (மலை.), ஆசாசி (சா.அ.), ஆவந்தி (ஜ®.), ஆவல்லி (மூ. அ.), இரேசகி (மலை.), இரேசகிக்கொடி (சி.வை. அ.), உபவம் (மூ.அ.), உபவரி (சா.அ.), உபவரிக் கொடி (சி.வை.அ.), எட்டிக்கொடி (சா.அ.), எட் டிகக்கொடி (சி.வை.அ.),எட்டிகம் (மூ.அ.), ஐயம் (சா.அ.), ஒசிதக்கொடி (சி.வை.அ.), ஒசிதம்(சா. அ.), கச்சி (மூ.அ.), கரிமுகவாசி (சா.அ.), கழுகி (மலை.), கழுசி (சா.அ.), களுசி (தைலவ.தைல. 98), காண்டகக்கொடி (சி.வை.அ.), காண்டகம் (சா.அ.), காண்டம் (மூ.அ.), காதவம் (சா.அ.),

கானம் (சா.அ.), குடிச்சி (சா.அ.), குடூசி (சா. அ.),குண்டலி(தைல.தைல.56 ), குண்டலியா(சா. அ.), குணலி (மலை.), குல்ப்பசிமாது (சா.அ.), கெஞ்சி (சா.அ.), கெண்டகாரணி(சா.அ.),கேசர முடையான் (சா.அ.), கேலிகம் (சா.அ.), கைப் புச்சீந்தில் (த.பே.அ.), கொடியவிஷகாரி (சா. அ.), சக்கரலட்சணம் (சா.அ.), சஞ்சீவி (த.பே. அ.), சந்திரபுட்பம் (சா.அ.), சந்திரா (சா.அ.), சல்லைக்கொடி (F.T.C.), சாகாதமூலி (சா.அ.), சாகாதுண்டம் (த.பே.அ.), சாகாமூலி (சா. அ.), சாங்கசக்கொடி (சி.வை.அ.), சாங்கசம் (சா.அ.), சிந்துக்கொடி (த.பே.அ.), சிலாந்தி (மலை.),சிலாந்திகக்கொடி (சி.வை.அ.), சிலாந்தி கம்(சா.அ.), சிவ்வந்தி (சா.அ.),சிவேதை(மூ.அ.), சின்னம் (ஞானா.59.16), சின்னருகா (சா.அ.), சின்னாருகம் (மலை.), சின்னாருகை (சா.அ.), சின்னாருதம் (சா.அ.), சீலகி (சா.அ.), சீலகிக் கொடி (சி.வை.அ.), சீலம் (சா.அ.), சீவகமூலி (சா.அ.), சீவசஞ்சீவி (சங்.அக.), சீவந்தி(மலை.), சீவந்திகம் (சா.அ.), சீவந்திரி (சா.அ.),சீவந்திரிக் கொடி (சி.வை.அ.), சீவந்தில் (மலை.), சீவன் (ஜ.), சுசிதக்கொடி (சி.வை.அ.), சுசிதம் (சா. அ.), சுரமதில்(சா.அ.), சுவேதகாண்டம் (மலை.), சூக்குமசீந்திக்கொடி (சி.வை.அ.), சூக்குமசீந்தில் (சா.அ.), சூக்குமம்(மலை.), சோமவல்லி(மலை.), சோமவலகம் (சா.அ.), தந்திரகம் (சா.அ.), தந் திரம்(மூ.வை.அ.), தலைச்சுருணி(சா.அ.),தலைச் சுருள் (சா.அ.), தலைச்சுருளி (சா.அ.), தித்தபரு வன் (சா.அ.), தித்தாமிர்தம் (சா.அ.), திமிரக் கடலி (சா.அ.), துளவை (சா.அ.), தூறுபுட்கரக் கொடி (சி.வை.அ.), தூறுபுட்கரம் (சா.அ.),தூறு புட்பம் (த.பே.அ.), தூறுபுளப்பம் (சா.அ.),தேவ நிறம் (சா.அ.), நற்சீந்தில் (சா.அ.), நாதேயம் (மலை.), நிதைருநூறு (சா.அ.), நிறைதருதுறு(சா. அ.), நிறைதருதூறு (மலை.), நொசிகக்கொடி(சி. வை.அ.), நொசிகம் (சா.அ.),பத்தினிமாது (சா. அ.), பரணி (ஜ.), பரிவை (த.பே.அ.), பறிவை (சது.), பறிவைக்கொடி (சி.வை.அ.),பறுணி (சா. அ.), பறுணிகை (சா.அ.), பறுணிகைக்கொடி (சி. வை.அ.), பாதாளமூலம் (த.பே.அ.), பாதாளமூலி (த.பே.அ.), பொற்றாவல்லி(சங்.அக.), பொன்றா வல்லி (தைலவ.தைல.), பொன்னாவல்லி(சா.அ.), மகாபாபத்தழகி (சா.அ.), மதியாம்பல் (மலை.), மதிலாம்பல் (ஜ.), மதிவாம்பல் (சா.அ.), மதி வாம்பல்கொடி (சி.வை.அ.), மதிவாமியக்கொடி (சி.வை.அ.), மதிவாமியம் (சா.அ.), மதுச்சிரம் (சங்.அக.), மதுபர்ணிகை (சா.அ.), மதுபரன் (சா. அ.),மதுபரிணிகை(சா.அ.),மதுபருணிகை(தைலவ. தைல.), மதுபன்னி (சங்.அக.), மருந்தாதி (சா. அ.), மருந்தாதிக்கொடி (சி.வை.அ.), மூதண்டக் கொடி (சா.அ.), மூலகம்பகைத்தான் (சா.அ.),

மோதிரைகெங்கை (சா.அ.), ரேரகி(சா.அ.),வச்சாகநி (மூ.வை.அ.), வச்சாதநி (சா.அ.), வச்சாதனி (மலை.),வச்சாதனிக்கொடி (சி.வை.அ.),வசிகரம் (மலை.), வஞ்சி (மூ.அ.), வபாமது(பச்.மூ.), வயமது (சங்.அக.),வயாதிகக்கொடி (சி.வை.அ.), வயாமது (மூ.அ.), வல்லி (ஜ.௫.), வள்ளிக்கண்டம் (சா.அ.), வள்ளிகா (சா.அ.), வள்ளிகாக்கொடி(சி. வை. அ.), விசலி (சூடா.), விசலிக்கொடி (சி.வை. அ.), விருதலாதானம் (சா.அ.), வெங்கைபடுகனி (சா.அ.), வெடியாதி (சா.அ.), வெண்சீந்தில்(சா. அ.), வெண்சீந்திற்கொடி (சி.வை.அ.), வெள்ளைச்சீந்தில் (சா.அ.), வேரற்கு (சா.அ.). **(182)**

சீப்பங்கோரை
cīppaṅkōrai

கோரைவகை (த.பே.அ.)
Fisherman's sedge grass; *Cyperus venustus*.

சீப்பு (சா.அ.), சீப்புக்கோரை (த.பே.அ.), சீபங்கோரை (சா.அ.), மணிக்கோரை (த.பே.அ.).

சீப்புக்கோரை
cīppukkōrai

களைச்செடிவகை (த.பே.அ.)
A kind of weed.

சீமை அதிவிடயம்
cīmai ativitayam

வெளிநாட்டு அதிவிடயம் (சா.அ.)
Foreign atis.

சீமை அமுக்கார்
cīmai amukkār

அமுக்கிராவகை (சா.அ.)
A kind of Indian water cherry.

சீமைக்கடுக்காய்
cīmaikkaṭukkāy

வெளிநாட்டுக்கடுக்காய் (சா.அ.)
Foreign gal-nut.

சீமைக்கத்தரி
cīmaikkattari

கத்தரிவகை (த.பே.அ.)
A kind of brinjal.

சீமைக்கத்திரி (சா.அ.)

சீமைக்கர்ப்பூர வல்லி
cīmaikkarppūra valli

கர்ப்பூரவல்லி வகை (சா.அ.)
Bastard lavender; *Anisochilus* genus.

சீமைக்கருவேல் — வேலமரவகை (சா.அ.)
cīmaikkaruvēl — A kind of babul.

சீமைக்கற்றாழை — குத்துச்செடிவகை (த.பே.அ.)
cīmaikkaṟṟāḻai — Giant Mexican lily, large shrub; *Furcraea foetida*.

சீமைக்கத்தாளை (F.T.C.), பறுகிக்கற்றாழை(சி.வை.அ.), பறுகீ(சா.அ.), பெருந்தாழை (சா.அ.).

சீமைக்காசான் — சிறுமரவகை (த.பே.அ.)
cīmaikkācāṉ — Ellis duranta, evergreen small tree; *Duranta repens*.

சீமைக்கொட்டைக்களா — இலங்கைமரவகை (த.பே.அ.)
cīmaikkoṭṭaikkaḷā — Thornless long-leaved sweet thorn, Lovi-lovi of Ceylon, small tree; *Flacourtia inermis*.

சீமைச்சொத்தைக்களா (சா.அ.), சொத்தைக்களா (த.பே.அ.).

சீமைக்கொய்யா — கொய்யாவகை (த.பே.அ.)
cīmaikkoyyā — Chinese guava, small tree; *Psidium cattleyanum*.

சீமைச்சணல் — சணல்வகை (த.பே.அ.)
cīmaiccaṇal — A kind of sunn-hemp.

மசினை (த.பே.அ.), மாலிகை (த.பே.அ.).

சீமைச்சாதிக்காய் — நறுமணமுள்ளசாதிக்காய் (சா.அ.)
cīmaiccātikkāy — Fragrant nutmeg.

சீமைச்சாமந்தி — சாமந்திவகை (த.பே.அ.)
cīmaiccāmanti — Roman or true chamomile, flowering shrub; *Anthemis nobilis*.

ஊதாசாமந்தி (சா.அ.), ஐ (சா.அ.), குரங்கு (சா.அ.), சங்கசுத்தம் (சா.அ.), சாமந்தி (த.பே.அ.).

சீமைச்சித்திரமூலம் குத்துச்செடிவகை (சா.அ.)
cimaiccittiramūlam Slipper plant, ornamental shrub;
*Pedilanthus tithymaloides.*

கண்ணாடிக்கள்ளி (F.T.C.)

சீமைச்சிவதை சிவதைக்கொடிவகை (மூ.அ.)
cimaiccivatai A kind of Indian jalap.

சீமைச்சிறுவேல் மரவகை (சா.அ.)
cimaicciṟuvēl Green wattle, evergreen tree;
*Acacia decurrens.*

சீமைவேலம்பட்டை (த.பே.அ.)

சீமைச்சீரகம் சீரகவகை (சா.அ.)
cimaiccīrakam Black caraway, herb;
*Carum bulbocastanum.*

கவற்சீரகம் (சி.வை.அ.), கேவலிகா (சா.அ.), பிளப்புச்சீரகம் (கு.பா.), பிளப்புசீரகம் (சா.அ.), பிளவுசீரகம் (மூ.வை.அ.), பிறியகம் (சா.அ.), பிறியசீரகம் (சி.வை.அ.).

சீமைச்செம்மரம் சிறுமரவகை (சா.அ.)
cimaiccemmaram Log wood, small tree;
*Haematoxylon campechianum.*

சாயமரம் (இங்.வை.)

சீமைச்சோம்பு பூடுவகை (த.பே.அ.)
cimaiccōmpu Caraway, herb; *Carum carvi.*

அப்பகாசச்சோம்புச்செடி (சி.வை.அ.), அப்பகாசம் (சா.அ.), கேக்குவிதை (சா.அ.), கேக்குவிரை(த.பே.அ.), கேதுருவிதை(சி.வை.அ.), சகாசீரகம்(இந்துபா.96), சீமைச்சீரகம் (த.பே.அ.), சீமைவிதை (சா.அ.), மலைச்சோம்பு (சா.அ.).

சீமைத்தண்ணீர் விட்டான்கிழங்கு கொடிவகை (சா.அ.)
cimaittaṇṇir viṭṭāṉkiḻaṅku South African climbing asparagus, climber;
*Asparagus sarmentosus.*

சீமைச்சதாவேரி (சா.அ.)

**சீமைத்துத்தி** துத்திவகை (த.பே.அ.)
**cīmaittutti** Marsh mallow, herb; *Althaea officinalis.*

சீமைத்துத்திச்செடி (சி.வை.அ.)

**சீமைத்தேவதாரு** நீண்டமரவகை (த.பே.அ.)
**cīmaittēvatāru** Long - leaved pine, long tree; *Pinus longifolia.*

கௌரிமாதி (சா.அ.), கௌரிமாதிமரம் (சி.வை.அ.), சரலம் (சா.அ.), சரளதேவதாரம் (சா.அ.), சரளதேவதாரி (சா.அ.), சரளதேவதாரு (சா.அ.), சரளம் (பெரியபு. நாட்டு. 29), சரளைத்தேவதாரு (சா.அ.), சரளைத்தேவதாருமரம் (சி.வை.அ.), சிகரிமாதியம் (சா.அ.), சிகரிமாதியமரம் (சி.வை.அ.), சீமைத்தேவதாரி (சா.அ.), சுருள்தேவதாரு(சா.அ.), சுறாத்துருமம் (சா.அ.), துவிதத்தாரு (சா.அ.), துவிதத்துரு (சா.அ.), பொற்றேவதாரி (சா.அ.), பொற்றேவதாரிமரம் (சி.வை.அ.), வாதரக்காச்சி (த.பே.அ.), வாதராட்சி (த.பே.அ.), வாதராயணம் (த.பே.அ.). (21)

**சீமைநரி வெங்காயம்** பூடுவகை (சா.அ.)
**cīmainari veṅkāyam** A herb; *Urginea scilla.*

சீமைவெங்காயம் (சா.அ.)

**சீமைநன்னாரி** நன்னாரிவகை (த.பே.அ.)
**cīmainaṉṉāri** Sarasaparilla china root, climber; *Smilax officinalis.*

சாரசம்(த.பே.அ.), சிறுமூலக்கொடி(சி.வை.அ.).

**சீமைநாபி** சிறுகுத்துக்செடிவகை (இங்.வை.)
**cīmaināpi** Aconite, small shrub; *Aconitum napellus.*

சிற்சதச்செடி (சி.வை.அ.)

**சீமைநாயுருவி** குத்துச்செடிவகை (F.T.C.)
**cīmaināyuruvi** Aaron's-rod, under shrub: *Stachytarpheta jamaicensis.*

சீமைநாய்விராஞ்சி (சா.அ.), சீமைநாய்விருஞ்சி (த.பே.அ.), நாயிராஞ்சி (சா.அ.).

சீமைநிலவேம்பு
cīmainilavēmpu

நிலவேம்புவகை (த.பே.அ.)
A bitter species of French chiretta.

சூரத்துநிலவேம்பு (சா.அ.), நைசிகரவேம்பு (சா.அ.), நைசிகாவேம்பு (சி.வை.அ.).

சீமைநீலி
cīmainīli

அவுரிவகை (த.பே.அ.)
West Indian indigo, shrub; *Indigofera suffruticosa*.

சீமைநூக்கு
cīmainūkku

மேனாட்டுமரவகை (த.பே.அ.)
True mahogany, large tree; *Swietenia mahagoni*.

நூக்கமரம் (சா.அ.), மஹாகோனி (F.T.C.).

சீமைநெல்லி[1]
cīmainelli

நெல்லிவகை (த.பே.அ.)
Box-leaved barbadoes cherry, medium shrub; *Malpighia coccigera*.

சீமைநெல்லி[2]
cīmainelli.

நீண்ட குத்துச்செடிவகை (த.பே.அ.)
Surinam cherry, large bushy shrub; *Eugenia uniflora*.

சீமைப்பச்சை மிளகாய்
cīmaippaccai miḷakāy

மிளகாய்வகை (த.பே.அ.)
Cayenne pepper, small shrub; *Capsicum fastigiatum*.

பேய்மிளகாய் (த.பே.அ.)

சீமைப்பருத்தி
cīmaipparutti

மேனாட்டுப்பருத்தி (த.பே.அ.)
Barbadoes cotton, small tree; *Gossypium barbadense-typicum*.

இலாடன்பருத்தி (சா.அ.), கடல்பருத்தி (சா.அ.), மயிலான்பருத்தி (சா.அ.).

